# டாக்டர் மு. வ. அவர்கள் தமிழ்மொழி இலக்கியத்துக்கு ஆற்றிய தொண்டு

31-1-78 1.2.78

பேராசிரியர் :
அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.
தமிழ்க்கலை இல்லம், சென்னை-30

மு. வ. நினைவு சொற்பொழிவுகள்

மதுரைப் பல்கலைக்கழகம்
பல்கலை நகர், மதுரை-21

# டாக்டர் மு. வ. அவர்கள் தமிழ்மொழி-இலக்கியத்துக்கு ஆற்றிய தொண்டு

## -சிறப்பாகத் திறனாய்வு பற்றி-

**31-1-78 1-2-78**

அ. மு. பரமசிவானந்தம்
தமிழ்க்கலை இல்லம், சென்னை-30

மு. வ. நினைவு சொற்பொழிவுகள்

மதுரைப் பல்கலைக் கழகம்
பல்கலை நகர், மதுரை-21

# முன்னுரை

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தால்
மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகும் —மொழித்
திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதுநூற் கலைதெரிந்த
கட்டறுத்து வீடு பெறும்"

என்பது பழம்பாட்டு. இந்தப் பாட்டுக்கு இலக்கணமாக— எடுத்துக் காட்டாக வாழ்ந்தவர் டாக்டர் மு. வ. அவர்கள். அவர் வாழ்ந்த காலம் அளவில் சிறியதே. ஆயினும் அவர் எண்ணிய எண்ணங்கள் அளப்பரியன. உலக ஒருமைப்பாடும் அதில் தமிழ்ச் சமுதாய முன்னேற்றம், தமிழ் மொழியின் செம்மை நலம், மக்கள், நல்வாழ்வு ஆகியன சிறக்கவேண்டும் என்பதும் அவர்தம் எண்ணங் களின் அடிப்படை. அந்த அடித்தளத்தின் மேல்தான் அவர் பலப் பல நூல்களைப் பலப்பல வகையில் எழுதினார். இந்த நூல்கள் அனைத்தும் வையத்தை வாழவைக்கப் பயன்படுவன.

சாதாரண அரசாங்க 'குமாஸ்தா'வாகவும் உயர்நிலைப் பள்ளி ஆசிரியனாகவும் தமிழ்நாட்டு வடகோடியில் தன் வாழ்வினைத் தொடங்கித் தமிழ்நாட்டுத் தென்கோடியில் கல்விநலம் காணும் இம்மதுரையில் பல்கலைக் கழகத் துணைவேந்தராகத் தம் வாழ்வை அறுதியிட்டுக் கொண்டவர் டாக்டர் மு. வ. ஆவர். இன்னும் சில காலம் இருந்திருப்பாராயின் இதனினும் உயரிய பதவிகள் இவரை வந்து அடையக் காத்திருந்தன என்பதைச் சிலரே அறிவார். இப்புகழனைத்தும் இவரது சலியா உழைப்பினாலும் உயர் எண்ணத்தினாலும் அதன்வழி அமைந்த நற் செயல்களாலும் எழுதிய நல்ல நூல்களாலும் அமைந் தனவேயாம்.

இத்தகைய நல்லவரைப் போற்றும் முகத்தான் இம் மதுரைப் பல்கலைக் கழகம் அவர் பெயரால் நிலைத்த பணிகள் பல செய்துள்ளது; செய்ய இருக்கின்றது. அவற்றுள் ஒன்றே இந்த நினைவுப் பேச்சின் தொடராகும். இத்தொடரைத் தொடங்கும் வகையில், இந்த ஆண்டில் முதன்முதலாக இத்தொடர் வரிசையில், என்னைப் பேசுமாறு பணித்தமைக்கு இப்பல்கலைக் கழகத்துக்கு நன்றி யுடையேன்.

டாக்டர் மு. வ. அவர்களோடு நெருங்கிப் பழகிய மிகச் சிலருள் நான் ஒருவன். அவரோடு பதினேழு ஆண்டுகள் உடன் பணியாற்றியவன் நான். மேலும் எங்கள் இருவர்தம் குடும்பங்களும் ஒன்றிய குடும்பங் களாகவே வாழ்ந்தன. காண்போர் பலரும் எங்கள் இருவரையும் உடன்பிறந்தவர்களாகவே கருதினர். இந்த

நிலையில் நான் அவரைப் பற்றி எண்ணும்போது ஏங்கி ஏங்கி நிற்பதுண்டு. இந்தச் சொற்பொழிவுகளுக்காக இவர் தம் நூல்களைப் படித்த போதெல்லாம் கடந்த நாற்ப தாண்டுகளின் பல நிகழ்ச்சிகள் என் கண்முன் நிழலாடின. சிலவிடங்களில் என்னை மறந்தும் நின்றேன்.

இந்த ஆய்வுச் சொற்பொழிவுகளில் நான் இவர் நூல்கள் அனைத்தையும் காட்டிவிட்டேன் என்று சொல்ல முடியாது. சிலவற்றைத் தொடவே இல்லை. சிலவற்றின் பெயர்களை மட்டும் குறித்தேன். சிலவற்றின் முன்னுரைகளை மட்டும் தொட்டேன். எடுத்துக்கொண்ட ஒருசில நூல்களையும் முற்றும் ஆய்ந்து எழுதிவிட்டேன் என்று சொல்ல இயலாது. நான் காட்டியன மிகமிகச் சிலவே. இவர்தம் ஒவ்வொரு நூலும் தனித்தனியே ஆராயத்தக்க வகையில் அமைந்துள்ளமை அனைவரும் அறிவர். எனவே என் இந்தப் பேச்சுத் தொடர் முற்றிய ஒன்று எனக் கூற இயலாது.

முதல் பகுதியில் இவர் படைப்பிலக்கியங்களாகிய நாவல், சிறுகதை போன்றவைகளையும் பிறவற்றையும் எடுத்து ஓரளவு காட்டியுள்ளேன். இரண்டாவது பகுதியில் மொழி, இலக்கியத்திறன் ஆகிய இரண்டின் அடிப்படையில் அமைந்த நூல்களை எடுத்து ஓரளவு காட்டியுள்ளேன். முன்னதில் இவர்தம் இலக்கியங்களையும்—சிறப்பாகப் படைப்பிலக்கியங்கள் வழி இவர் வாழ்வைத் திறனாய்ந்த வகையினையும் ஒல்லும் வகையில் காட்டி, இரண்டாவதில் மொழித் திறன் காட்டிய சிறப்பையும் இலக்கியத் திறன் கண்ட மரபையும் சுட்டிக் காட்டியுள்ளேன். இரண்டிலேயும் நான் அனைத்தையும் முற்றக் காட்டிவிட்டேன் என்று கூற இயலாது.

தமிழ்நலம் பேணும் இம் மதுரைப் பல்கலைக் கழகத்து மு. வ. நினைவுச் சொற்பொழிவை முதலாவதாக இந்த ஆண்டில் என்னைப் பேசப் பணித்த தமிழ் உள்ளம் வாய்ந்த துணைவேந்தர் அவர்களுக்கும் பதிவாளர் அவர்களுக்கும் தமிழ்த்துறைத் தலைவர் அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இக் கட்டுரைகளின் குறை நீக்கிக் குணமிருப்பின் ஏற்று நலம் புரக்குமாறு அனைவரையும் வேண்டிக்கொள்ளுகிறேன்.

பணிவுள்ள
அ. மு. பரமசிவானந்தம்
தமிழ்க்கலை இல்லம்,
சென்னை-30.

பல்கலைநகர்,
மதுரை
1-2-1978

# முதல்நாள் சொற்பொழிவு-(31-1-78)

## இலக்கியம்

உலகில் வாழும் உயிரினங்களில் தலையாயவன் மனிதன். நல்லதன் நலனும் தீயதன் தீமையும் எண்ணிப் பகுத்துணர்ந்து நல்லன செய்து அல்லன மாற்றி அவனியை வாழ வைப்பது அவன் பண்பாகும். அவன் தோன்றிய காலம் எதுவாயினும், அவன் மொழியறிந்து அதனுல் மற்றவரோடு கலந்து பயின்று வாழக் கற்றுக் கொண்ட நாளே சிறந்தது. அதனினும் அந்த மொழி வழியே 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற உணர்வில் இலக்கியம் கண்ட நாள் சிறந்ததாகும். அவனுடைய தூய உள்ளத்தில் எண்ணம் தோன்ற, அந்த எண்ணத்தின் வழியே எழுத்துக்கள் நிரல்பட அமைய அதை வாய் மொழிய - கை தீட்ட - பாடிய - எழுதிய இலக்கியம் தோன்றிய நாள்தான், மிகமிகச் சிறந்ததாய் அவன் பண்பினைப் பாரறியச் செய்து பார் உள்ளளவும் அவனையும் அவன் வழியே உருவாகும் சமுதாயத்தையும் வாழவைக்கத் தொடங்கிய நாளாகும். அந்நாள் தொட்டு அவன் பல்வேறு மொழிகளில் பல்வேறு வகைகளில் எண்ணற்ற இலக்கியங்களை இயற்றி ஏற்றமுற்று வாழ்கின்ருன். 'உளங் குளிர்ந்த போதெல்லாம் உவந்துவந்து' பாடும் அவன் உள்ளத்துணர்வே உயர்ந்து நிற்க, அதன்வழி உருவாகும் இலக்கியங்களே இன்று உலகை நடத்திச் செல்லுகின்றன என்பது உண்மையாகும். கற்று உணர்ந்து போற்றும் நல்ல இலக்கியங்கள் இவ்வாறு உலகை நடத்திச் செல்லுவது மட்டுமன்றி, தாமும் காலத்தை வென்று வாழ்வனவாகும். ஆம்! தாம் மட்டுமன்றித் தம்மை உலகுக்கு அளித்த தலைவனும் கவிஞனை

யும் உலகம் உள்ளளவும் வாழவைத்து வையத்தை வள முள்ளதாக்கும் இந்த இலக்கியங்களை நாம் நினைத்துப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

வாழ்வைப் பிணைத்து உள்ளத்து உதித்தெழுந்த இலக்கியங்கள் காலத்தை வென்று வாழ்வனவாகும். இஃது எம்மொழிக்கும் பொருந்திய ஒரு மேல்வரிச் சட்டம். ஒவ்வொரு மொழியிலும் பல்லாயிரக்கணக்கான இலக்கியங்கள் தோன்றினும் அவை காலத்தை வென்று வாழ்வதில்லை. எங்கோ சில நிலைத்த வாழ்வைப் பெறுகின்றன. காரணம் ஒன்றேதான். ஆம்! மக்கள் வாழ்வினை – சமுதாய வாழ்வினை – உயிர் வாழ்வினைப் பின்னிப் பிணைந்து எழும் இலக்கியங்கள் அனைத்தும் - எம்மொழியில் தோன்றினும்–அவை காலத்தை வென்று வாழும். அல்லாதன...!

டாக்டர் மு.வ.

தமிழ்மொழியில் இத்தகைய வாழ்விலக்கியங்கள் எண்ணற்று உள்ளன. அவற்றை ஓரளவு எல்லையிட்டுக் காட்டினும், அதன் அளவு, பிறமொழி இலக்கியங்களை நோக்க – எங்கோ ஒரிரு மொழிகள் தவிர்த்து - மிகப்பரந்து காணப்படுகின்றதென்பது உலகறிந்த உண்மை. மேலும் காலத்தால் பழமை பெற்ற இலக்கியங்களும் தமிழில் பல உள்ளன. இவற்றுள் சிலவற்றை ஆக்கிய பெரியோர் தம் பெயர்கள்கூடத் தெரியவில்லை யாயினும் அவை தம் பொருட் செறிவாலும் நலத்தாலும் காலத்தை வென்று வாழக் காண்கின்றோம். இத்தகைய நல்ல இலக்கியங்களை நாட்டில் அன்றுதொட்டுப் பயில்வார் பலர்; பலன் காண்பார் சிலர். ஆயினும் தம்மை அதனுள் ஆழ்த்தி, அந்த இலக்கியக் கடலுள் மூழ்கி, முத்தெடுத்து உலகுக்கு அளிப்பார் மிகச் சிலரே. அச்சிலருள் இந்த நூற்றாண்டில் நம்மிடை வாழ்ந்து மறைந்த நல்லவரும் சிலர் உள்ளனர். அவருள் மிகச் சிறந்தவராகப் போற்றத்தக்கவர் டாக்டர் மு. வரதராசன் அவர்கள் ஆவர்.

## வாழ்வு

இவர்தம் இலக்கிய உளத்தையும் ஆழத்தையும் அறிவையும் ஆர்வத்தையும் ஆயும் திறனையும் எண்ணிப் பார்ப்பதற்கு முன் இவர் வாழ்வு பற்றி எண்ணல் சால் புடைத்தாகும் என எண்ணுகின்றேன். வடார்க்காடு மாவட்டத்தில் வேலம் என்னும் சிற்றூரில் எளிய குடும் பத்தில் தோன்றிய இவர் மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக மறைந்த வரையில் - அறுபத்து இரண்டு ஆண்டுகள் வாழ்வில் ஆற்றிய செயல்களை ஈண்டு நாம் முறைப்படுத்திக் காண வேண்டுவதில்லை. அவர்தம் வாழ்க்கைச் சூழல், பிறந்த ஊர், வட்டம், மக்கள் வாழ்வு, பழக்க வழக்கங்கள், சமுதாயச் சார்பு, நாட்டுப்புற நகர்ப் புற வாழ்வுநிலை ஆகியவை இவர்தம் நூல்களில் இடம் பெற்றமையைக் காணின் இவர் வாழ்வே நன்கு புலனுகும். இவர்தம் நாவல், சிறுகதை, நாடகம், கட்டுரை முதலியவை களில் அவை அனைத்தும் நன்கு காட்டப்பெற்று விளக்கம் பெறுவதோடு, விமரிசனமும் செய்யப் பெறுகின்றன.

'மு.வ.'வின் சொந்த ஊர் வடார்க்காடு மாவட்டத்து 'வேலம்' என்றுலும், இவர் பிறந்த ஊர் அம் மாவட்டத் தைச் சார்ந்த திருப்பத்தூரேயாகும். இவரது இயற்பெயர் 'திருவேங்கடம்' என்றுலும் பாட்டன் பெயராகிய 'வரத ராசன்' என்ற பெயராலேயே வழங்கப் பெற்றுர். தாயா கிய அம்மாக்கண்ணு அம்மாவிடமும் தந்தையாகிய முனுசாமி முதலியார் அவர்களிடமும் இவர் கொண்ட பற்றினைக் காட்டிலும் இவரது தாய்வழிப் பாட்டியாகிய நரசம்மா அவர்களிடமே இவர் அதிகப் பாசமும் பற்றும் கொண்டு வளர்ந்தார் என்பது பலருக்குத் தெரியாத ஒன்று. இளமையில் அந்தப் பாட்டியின் பரிவும் பண்புமே இவ ரைப் போற்றி வளர்த்தன; இவரை நல்லவராகவும் வல்ல வராகவும் ஆக்கிய பெருமையும் அவருக்கே உண்டு அது மட்டுமன்றி, எங்கோ கிராமத்தில் தோன்றி - வளர்ந்த அந்த வயதான பாட்டியே டாக்டர் 'மு.வ.'வின் சீர்திருத்த

உணர்ச்சிகளும் செம்மை நெறிகளும் தோன்றி வளர வித்திட்டவராவர். இளமையிலேயே இவர் சீர்திருத்த உணர்ச்சியாளராக வளர வாய்ப்பு அளித்தவர் இவர்தம் பாட்டியாரேயாவர். எனவே அப் பாட்டியார் மறைந்த போது, அவர்தம் இறுதிச் சடங்குகளை வைதிய முறையி லன்றி, தேவார, திருவாசகம் ஓதுவிக்கச் செய்து அவர் களைச் சிறப்பித்தார் மு. வ. அத் தேவார, திருவாசகப் பாடல்களை ஓதிச் சடங்குகளைச் செய்ய உதவியவன் நானே. அப்போது அந்த இரண்டு நாட்களில் வேலத் தில் இவரொடு தங்கிய காலத்தில் இவர்தம் பாட்டியாரைப் பற்றிக் கூறிய பண்பார் உணர்வுடைச் சொற்கள் இன்றும் என் மனத்திடை உள்ளன.

இவர் இளமையில் பத்தாம் வகுப்பு வரையிலே முறை யாகப் பயின்றார். முருகைய முதலியார் என்பவரிடம் முதலில் தமிழ் பயின்றார். பின், பள்ளியிலோ கல்லூரி யிலோ சேரவில்லை எனினும், முறையாகக் கற்பன கற்று, உயர்ந்த டாக்டர் (பிஎச். டி.) பட்டம் பெறும் வரையில் பயின்று சிறந்து விளங்கினர். அது மட்டுமன்று; சென்னைப் பல்கலைக் கழகத்தில் முறையாகப் பயின்று கட்டுரை எழுதி முதன்முதல் டாக்டர் பட்டம் பெற்றவர் இவரே. பின் அமெரிக்க நாட்டு ஊஸ்டர் கல்லூரி இலக்கியப் பேரறிஞர் (டி.லிட்.) பட்டத்தையும் வழங்கியது. இப் பட்டம் பெற இவரை அழைத்ததும், பட்டம் பெற்றதும் பலருக்குத் தெரியா வகையில் அமைதியாகச் சென்று வந்ததோடு, அதுபற்றி யாரிடமும் கூறிக்கொண்டு விழா ஆற்றச் செய்யாது அமைந்து வாழ்ந்த இவர் வாழ்க்கை பொய்ப்புகழ் விரும்பிச் சுற்றிச் சுழலும் இவ்வுலகுக்கு ஒரு பாடமாக அமைய வேண்டும்.

இவர் வாழ்க்கை அல்லது உத்தியோகம் தமிழாசிரியர் என்பதில் தொடங்கவில்லை. திருப்பத்தூர் தாலுக்கா அலுவலகத்தில் எழுத்தராகவே பணி புரிந்தார். இவர்தம் நாவல்களிலும் சில கட்டுரைகளிலும் வரும் சில தாலுக்கா

அலுவலகக் 'குமாஸ்தா'க்கள் இவர்தம் சொந்த வாழ்வின் அனுபவத்தில் முளைத்தனவேயாம். அப்படியே அந்தத் துறை அதிகாரிகள் பற்றிய குறிப்புக்களும் அமைவன வாகும்.

## இளமை பற்றித் திரு. வி. க.

1935 ஆம் ஆண்டு முதல், 1939இல் பச்சையப்பர் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பதவியேற்கும் வரை திருப்பத்தூர் நகராட்சிப் பள்ளியில் தமிழாசிரிய ராகப் பணியாற்றினர். அக்காலத்திலேயும் பச்சையப்பரில் சில ஆண்டுகளிலும் இவர் தலைப்பாகை - பஞ்சகச்ச உடையுடன் பழைய பண்டிதர் கோலத்திலேயே காட்சி அளித்தார். பச்சையப்பரில் சேர்ந்த பிறகும் அதற்குமுன் சில ஆண்டுகளிலும் இவர் சென்னையில் பலரோடு பழகிய பழக்கமும் பழகிய இடங்களும் பிறவும் பின் இவர் சென்ற இடங்களில் கண்டவையும் கேட்டவையும் இவர்தம் நாவல்களுக்கும் பிறவற்றிற்கும் நிலைக்களன்களாகவும் நிகழிடங்களாகவும் வழிகாட்டிகளாகவும் அமைந்தன. இவர்தம் இளமையின் பொலிவைத் திரு. வி. க. அவர்கள் சுட்டிக்காட்டுவதை இங்கு எண்ணல் சிறப்புடையதாகும். (1944 - திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள். ப. 803-805).

"வாலாஜா, இராணிப்பேட்டை, வேலூர், வெட்டு வாணம் முதலிய இடங்களுக்கு யான் அடிக்கடி செல் வேன். கூட்டங்களில் யான் மு. வரதராசனாரைப் பார்ப்பேன். அவர் என்னைக் கண்டதும் ஒதுங்கி ஒதுங்கி நிற்பர். பின்னே நாங்கள் நெருங்கிப் பழகி னோம். வரதராசனார் முக அமைப்பு என் மூளைக்கு வேலை அளித்தது. அதைச் சிந்திக்கச் சிந்திக்க என் மூளை அவர் மூளையை நண்ணியது. நுண்ணறிவுக் கேற்ற முகம் வடிந்திருக்கின்றது என்ற முடிவுக்கு வந்தேன்.

முதல்முதல் வரதராசனுர் பேச்சை யான் வெட்டு வாணத்தில் கேட்டேன். அப் பேச்சு அவர் முக அமைப்பைப் பற்றி யான் கொண்ட முடிவை உறுதிப் படுத்தியது. அவரது எழுத்தும் பேச்சைப் போலவே இருத்தல் கண்டேன்.

வரதராஜனுரின் பேச்சிலும் எழுத்திலும் பர்னுட்ஷா வின் கருத்து ஆங்காங்கே பொதுளும். அவர் பர்னுட்ஷா நூல்களைப் படித்து ஒரு 'தமிழ் பர்னுட்ஷா ஆனுர் என்று கூறுதல் மிகையாகாது. பர்னுட்ஷா வைப் பார்க்கிலும் வரதராசனுர் ஒரு துறையில் சிறந்து விளங்குகிருர் என்பது எனது ஊகம். பர்னுட்ஷா பலப்பல நூல்களை எழுதி முதுமை எய்தியவர். இம் முதுமையில் அவர்க்கு வழங்கும் இக்கால அரக்கப் போர்க்காட்சி 'வாழ்க்கைக்குக் கிறிஸ்து வேண்டும்; பைபில் வேண்டும்' என்ற எண்ணத்தை அவரிடம் அரும்பச் செய்து வருகிறது. வரதராஜனுர்க்கோ அக் கருத்து இளமையிலேயே முகிழ்த்தது. 'வாழ்க்கைக்குச் சமயம் தேவை; கடவுள் தேவை' என்று இளமை வரதராஜனுர் பேசினுர்; எழுதினுர். கீழ்நாட்டு இளமை மேல்நாட்டு முதுமையை விஞ்சி நிற்கிறது.

... அவர் திருப்பத்தூரில் வசித்தபோது இயற்கை யோடியைந்த வாழ்வு அவரிடம் தானே தவழ்ந்தது. நண்பரது சென்னை வாழ்க்கை இயற்கையிலே செயற் கையைச் சேர்த்தது. அடிக்கடி நண்பரைச் சென்னை யில் காண்பதில் எனக்கு இன்பம் உண்டாகிறது. அதே நேரத்தில் செயற்கையின் சேர்க்கை நினைவு தோன்றும்போது துன்பம் உண்டாகிறது. அன்பரும் சிற்சிலபோது வருந்துவது எனக்குத் தெரியும்."

—இவ்வாறு பேரறிஞர் திரு.வி.க. அவர்கள் 'மு.வ.'வை அளவிட்டு எழுதியுள்ளார். உண்மையில் 1936இல் 'மு.வ.' அவர்களை எனக்கு அறிமுகம் செய்து வைத்தவர் திரு.வி.க.

அவர்களே. ஆனால் அன்று, 1944 இல் நானும் இவரும் பச்சையப்பர் கல்லூரியில் ஒருசேரப் பணியாற்றுவோம் என்று நினைக்கவில்லை. எங்கள் இருவர் தம் குடும்பமும் ஒருங்கிணைந்து உற்று வாழும் எனவும் எண்ணவில்லை. ஆம்! இன்று இவர் மறைந்த பிறகும் அவர்தம் மக்களொடும் ஒக்கலொடும் என் உறவு ஒட்டி நிற்பதோடு இவரும் என் உள்ளத்தில் நீங்கா இடம் பெற்றுள்ளமையை ஈண்டுக் குறிக்கக் கடமைப் பட்டுள்ளேன். பச்சையப்பர் கல்லூரியிலும் சரி, பல்கலைக் கழகக் குழுக்கள், பிற பொது நிலையங்கள் ஆகியவற்றிலும் சரி அவர் விட்ட இடங்களை நான் நிரப்பும் நிலை நான் ஓய்வு பெறும்வரை நீடித்துள்ளமையை எண்ணுகின்றேன்.

திரு. வி. க. அவர்கள் 'தமிழ்நாட்டுப் பர்னாட்ஷா' என்று 'மு.வ.'வைக் கூறியமைக் கண்டோம். ஆம்! இவர் பர்னாட்ஷா நூல்கள் பலவற்றைப் படித்தார். பல கருத்துக்களைத் தம் நூல்களிலும் பிணைத்துள்ளார். மேலும் வெல்ஸ், ஷெல்லி போன்ற மேலைநாட்டு அறிஞர்கள் நூல்களையும் காண்டேகர் போன்றார்தம் நாவல்களையும் குறளையும் தாயுமானவர் பாடல் போன்ற சமய இலக்கியங்களையும் 'மு.வ.' நன்கு பயின்றார். இவர் பயின்ற நிலையும் போற்றும் மரபும் இவர்தம் நூல்கள் பலவற்றுள் காணலாம். இவர்தம் இலக்கியத் தெளிவுக்கும் திறனாய்வுக்கும் செம்மைக்கும் அத்தகைய நல்லவர்தம் நூல்களே வழி காட்டிகளாக அமைந்தன எனக் கொள்ளல் பொருந்தும்.

## பச்சையப்பரில்

பச்சையப்பரில் டாக்டர் 'மு. வ.' அவர்கள் 1939இல் புகுந்தார். 1961 வரையில் இருந்தார். இந்தக் காலம்தான் இவர் இலக்கியத்துக்குப் பெருந் தொண்டாற்றிய காலம் எனலாம். இவர் பயின்ற நூல்கள் பலப்பல. பயின்றமைக்குச் சான்றாக ஓரிரு ஆண்டுகளில் கல்லூரி நூல்நிலையத்தில் இவர் எடுத்த நூல்களின் பட்டியலைப் பிற்சேர்க்கையில்

இணைத்துள்ளேன். பல மேலைநாட்டு அறிஞர்தம் நூல்களைப் பயிலும் வாய்ப்பினைப் பெற்றார். இக்காலத்தில்தான் இவர் நூல்கள் பலவும் எழுதினார். மேலும் இவர் வந்தபிறகு பச்சையப்பரில் தமிழ்ச் சிறப்பு வகுப்புக்கள் எல்லா நிலையிலும் இடம்பெற வாய்ப்பு உண்டாயிற்று. சென்னைப் பல்கலைக் கழக எல்லையில் முதன் முதல் தமிழ் 'எம். ஏ.'வைப் பச்சையப்பரில் புகுத்தி, தமிழ்நாட்டிலேயே தமிழ் நலம் பரப்பிய நல்லவர் இவர். அதற்குமுன் பாடத்திட்டமும் தனியாகத் தேர்விற்குச் செல்லும் முறையும் இருந்தன வேனும், கல்லூரியில் முறையாகப் பயிற்றும் நிலை பச்சையப்பர் வழியே சென்னைப் பல்கலைக் கழகத்துக்கு முதன் முதல் அமைந்தது. இவர்தம் செயல் திறனும் உணர்வும் உழைப்பும் பிற உயர் பண்புகளும் இவரை எல்லா வகையிலும் உயர்த்திப் போற்றின. கட்சி வேறுபாடற்று அரசியலாளர்களும், இலக்கிய அறிஞர்களும், பிறநாட்டவர்களும் இவரிடம் பெருமதிப்புக் கொள்ளக் காரணமாக இருந்த இவர்தம் பண்பு நலனே இவரைப் பின் இந்த மதுரைப் பல்கலைக் கழகத்துக்குத் துணைவேந்தராக உயர்த்திற்று. இவர்தம் வாழ்க்கைப்படிகள் ஒவ்வொன்றிலும் பெற்ற அனுபவங்கள் பலவற்றையும் இவர்தம் நூல்கள் பலவற்றிலும் பரக்கக் காணலாம். பின் கூடியவரையில் ஒரு சிறவற்றைத் தொட்டுக் காட்டலாம் என எண்ணுகின்றேன்.

## வாழ்க்கையும் இலக்கியமும்

இனி இவர் கண்ட வாழ்க்கையினையும் இலக்கியங்களையும் ஓரளவு எண்ணிக் காணல் ஏற்புடைத்தாகும். 'மு. வ.' அவர்கள் வாழ்க்கை வேறு, இலக்கியம் வேறு என்று எண்ணியவர் அல்லர். வாழ்க்கையினையே இலக்கியமாகத் துய்த்தவர். எனவே இவர் வாழ்வைக் கற்பதே இலக்கியமாக அமையலாம். மேலே திரு. வி. க. அவர்கள் காட்டியபடி இயற்கையும் செயற்கையும் இவர் வாழ்வில் கலந்து, இவர் வாழ்வை ஈர்த்துச் சென்றன. அதனாலேயே

இவர்தம் நூல்களிலே அவ்விரண்டனுக்கும் உள்ள மாருட்டங்களும் போராட்டங்களும் இடம் பெற்றுள்ளன. இலக்கியங்களின் திறன் கண்டு, அவற்றை ஆராய்ந்து எழுதிய கட்டுரைத் தொகுதிகளும், தனி இலக்கிய ஆய்வு நூல்களும் பல இருக்கின்றன. அவை பற்றி நாளை விளக்கமாகக் காணலாம். இன்று, இவர் எழுதிய பிற நூல்களில் இவர் பயின்று மேற்கொண்ட பிறர்தம் நூல்கள், இவர்தம் கொள்கைகள், நெறிகள் முதலியன பற்றியும் அவற்றில் இவர் கொண்ட ஈடுபாடு பற்றியும் ஓரளவு காணலாம். இவர் நாடகங்களும் நாவல்களும் பெற்றுள்ள பாத்திரங்களில் பலர் வாழும் மனிதர்களே! இன்றும் இவர் பாத்திரங்களாகக் கொண்ட 'மனிதர்' சிலர் வாழ்கின்ருர்கள். சில பாத்திரங்களின் பெயர்கள்கூட அப்படியே இருப்பதைக் காணலாம். இவரொடு கலந்து அவ்வப்போது பேசிய காலங்களிலெல்லாம் இவர் கூறிய சில காரணங்களும் பாத்திரங்களின் வாழ்வு நெறிமுறைகளும் நன்கு விளக்கம் பெறுவதறிந்தேன். சில பாத்திரங்களை இவர் எடுத்தாண்டமைக்கும் காரணங்கள் உண்டு. அவற்றையெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும்.

'மு.வ.' அவர்கள் இயற்கையிலே கூர்த்த மதியும் எழுத்தாற்றலும் பெற்றவர். என்ருலும், இவர் பயின்ற பல நூலாசிரியர்கள்—இந்திய நாட்டவரும் மேலைநாட்டவரும்—இவரை ஆட்கொண்டனர் எனலாம். இவர் முதல் முதல் எழுதியது செந்தாமரை என்னும் நாவல். அதிலும் கள்ளோ? காவியமோ?, அகல் விளக்கு, மலர்விழி போன்ற நாவல்களிலும் இவர் பாத்திரங்களே பேசுமாறு உள்ள நிலையினைக் காணலாம். இந்த உத்தியை இவர் காண்டேகர் நாவல்களைப் பயின்றே பெற்ருர். இவர் படியாத காண்டேகர்தம் நாவல்களே இல்லை எனலாம். அக்காலத்தில் காண்டேகர் நாவல் அனைத்தும் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டு நல்ல மதிப்பினைப் பெற்றுத் தமிழ்நாட்டில் உலவின. அவை அனைத்தையும் பயின்ற இவர் தாமும் அந்த முறையினைப் பின்பற்றினுர். மேலும் காண்டேகர்தம்

கருத்துரைக்கும் மரபு, முறை, போக்கு முதலியனவும் இவரை ஆட்கொண்டன. காண்டேகரை 'நாவல்' எழுதுவதில் தன் வழிகாட்டியாகவே கொண்டார் எனல் மிகையாகாது. பம்பாய் சென்ற காலத்தில் நேரில் சென்று அவரைக் கண்டு அவரொடு கலந்து பேசியும் வந்துள்ள 'மு. வ.' அவர்கள் அச்சந்திப்பால் மிக்க பயன்பெற்றதாகக் கூறுவர்.

## தமிழ்நாட்டுப் பர்னுட்ஷா

'மு. வ.' பர்னுட்ஷா நூல்களைப் படித்துத் தமிழ் பர்னுட்ஷா ஆனுர் என்று திரு. வி. க. அவர்கள் கூறியுள்ளதை மேலே கண்டோம். பச்சையப்பர் கல்லூரியில் இவர் 'பர்னுட்ஷா' நூல்கள் அனைத்தையும் நூலகத்தில் வாங்கச் செய்து படித்ததோடு, என் போன்ற மற்ற ஆசிரியர்களையும் மாணவர்களையும் படிக்கச் செய்தார்.'ஷா'வின் கருத்தும் போக்கும் இவர் உள்ளத்தைக் கவர்ந்தன. அப்படியே 'வெல்ஸ்' நூல்கள் அனைத்தும் பயின்று அவர் கருத்தையும் போக்கினையும் இவர் கைகொண்டனர். ஆங்கில நாட்டு நல்லறிஞர்தம் இலக்கிய நூல்களையும் நாவல்களையும் நிறையப் பயின்ருர். அவை யாவும் இவர் தம் நூல்களில் ஆங்காங்கே குறிக்கப் பெறுகின்றன. மற்றும் தாம் விரும்பிப் படித்த சமய நூல்கள் பலவற்றையும் தம் பாத்திரங்கள் கையிலும் கொடுத்துப் படிக்கச் சொல்லுவார். தாயுமானவர் பாடல், குறள் போன்ற இவர் உள்ளத்துக்கு இனிய நூல்கள் பாத்திரங்கள் உள்ளத்தையும் மாற்றியமைக்கும் முறையினைச் சில நாவல்களில் காணலாம். இவ்வாறு இவரை ஆட்கொண்ட இலக்கியங்கள் அனைத்தும் இவர்தம் பாத்திரங்களையும் ஆட்கொண்ட சிறப்பைப் பலவிடங்களில் காண இயலும்.

மேலைநாட்டு அறிஞர் பலர் போக்கினையும் முறையினையும் பயின்று இவர் தமுவினுர் என்ருலும் அவை பற்றியெல்லாம் விளக்கின் பெருகும் என அஞ்சி, திரு. வி. க. குறித்த 'பெர்னுட்ஷா'வொடு கொண்ட தொடர்பினை

மட்டும் இங்கே சுட்டிக்காட்ட நினைக்கின்றேன். (பிறவும் இவ்வாறே அமையும்). பெர்னுட்ஷாவின் நூல்கள் பல வற்றையும் பயின்ற 'மு.வ.' அவர்கள் அவரைப் போன்றே பாத்திரங்களைக் கற்பனை செய்து கொண்டார். பெர்னுட் ஷாவைப் பற்றியே ஒரு நூலை எழுதியுள்ளார். அது வெறும் வாழ்க்கை வரலாருக மட்டும் இல்லாமல் ஓர் இலக்கியத் திறனுய்வு நூலாகவே அமைகின்றது. டாக்டர் மு. வ. அவர்கள் ஷாவினைப் பற்றிக் கூறிய சில கருத்துக்களை மட்டுமே இங்கே சுட்டிக் காட்டுகிறேன். இவர்தம் நூலில் அக்கருத்துக்களுக்கேற்ப ஷாவின் எழுத்துக்களை எடுத் துக்காட்டிச் செல்லுகின்ருர் என்பது நூல் வழியே செல்வார் நன்கு உணர்வர்.

டாக்டர் மு. வ. அவர்கள் ஆடம்பரத்தை வெறுப்பவர் என்பதை யாவரும் அறிவர். அதே தலைப்பில் ஷாவினைப் பற்றிய நூலில் அந்த அறிஞரைப் பற்றி இவர் குறப்பிட் டுள்ளார்.

"உண்மையாகவே செல்வர்கள் ஆடம்பர வாழ்க்கை வாழ்வதனுல் அதில் இன்பத்தையோ உடல் நலத்தையோ உரிமையையோ காணமுடியாது என்பது அவர் கருத்து." (அறிஞர் பர்னுட்ஷா, ப. 87).

"அவருக்குக் கண்போன்ற கொள்கையாகிய கூர் தலறம் (Creative Evolution) தாய்மையை அடிப் படையாகக் கொண்டது. அவர் அடிக்கடி விளக்கும் உயிராற்றல் (Life Force) பெண்ணின் தாய்மை யாகவே வடிவு கொள்கிறது என மதித்து எழுதியுள் ளார். ஆண் பெண போராட்டத்தை விளக்கும் அவர் பெண்ணுக்கே எப்போதும் வெற்றி எனக் காட்டியுள் ளார்." (ப. 90) "குடும்ப வாழ்க்கை திருந்த வேண்டும் என்னும் நல்லெண்ணத்தோடு எழுதும் எழுத்துக் களில் புரட்சியோடும் உண்மையும் ஆர்வமும் கலந்து விளங்கக் காண்கிரேம்." (ப. 93)

"போட்டி ஒழிய வேண்டும், எத்தத் துறையிலும் போட்டி இருக்கக் கூடாது என்பது ஷாவின் கொள்கை." (ப. 96)

"சில புரட்சிக் கருத்துக்களை ஷா கூறியபோது, படிப்போரின் எண்ணங்களை நன்ருகத் தூண்டிவிட்டார். எண்ணி எண்ணி அவருடைய கருத்திற்கு உடன்படுமாறு செய்திருக்கிருர்." (ப. 97)

"சில இடங்களில் புரட்சியான கருத்துக்களைக் கூறிய போதிலும் மக்கள் பண்பு உணர்ந்தவராகவும் அருள் நெஞ்சினராகவும் ஷா விளங்கக் காண்கிரோம்." (ப. 98)

"பழையவற்றில் சீர்கெட்டவை நீங்கினல் அல்லாமல் நல்ல கொள்கைகளும் நெறிகளும் வாழமுடியாது என்பது அவருடைய கருத்து." (ப. 100)

"சமயத்துறையில் கூறப்படும் அற்புதங்களை ஷா நம்பியதில்லை. நரகம் சுவர்க்கம் போன்றவற்றையும் அவர் நம்பியதில்லை...ஆனல் சமயத்துறையில் கூறப்படும் அற்புதங்களை நம்பாதவர்கள், விஞ்ஞானத் துறையில் கூறப்படும் அற்புதங்களையும் கற்பனைகளையும் மட்டும் கண்ணை மூடிக் கொண்டு நம்புவதை வெறுத்தார்." (ப. 101)

"ஆனல் புத்தங்களில் முழுகிவிட்டு உலக வாழ்வை மறந்தவரல்லர் ஷா. பொருளீட்டும் துறையில் ஷா மிக வல்லவர். நூல் வெளியிடுவோரை விட, நாடகக் கம்பெனிக்காரரை விட, சட்டமும் பொருளியலும் நன்கறிந்தவர் ஷா." (ப. 115)

"என் பாட்டிக்குத் தெரிந்த பத்திய முறைகளும் இவர்களுக்கு (டாக்டர்களுக்கு) தெரியவில்லை"

என்றும் பச்சிலே மருத்துவனுடைய பழங்கால முறையை விட இவர்களுடைய விஞ்ஞான முறை முற்போக்கு அடையவில்லை' என்றும் வழக்கமான போக்கில் எழுதியுள்ளார்." (ப. 121)

"அவர்தம் ஆயுளைப் பற்றிச் சிறிதும் கவலைகொள்ள வில்லை. வெளியூருக்குச் சென்று மேற்கொண்ட வேலையை முடித்தவர்கள் அடுத்த வண்டியை எதிர் பார்த்திருப்பது போல் அவர் கவலையற்றவரா யிருந்தார்." (ப. 128)

"உஷா வறுமையில் வளர்ந்தார். ஆனால் செல்வராய் இறந்தார்." (ப. 137)

"அஞ்சாமை, கவலைஇன்மை, கலைஉணர்வு, அறி வின் தெளிவு இவை ஷாவின் வாழ்க்கை." (ப. 139)

மேலே காட்டியவை அனைத்தும் அறிஞர் பர்னாட்ஷாவைப் பற்றி டாக்டர் மு.வ. அவர்கள் எழுதியவை. இவர்தம் நூல்களைப் பயின்றவர்களும் உடன் இருந்து வாழ்ந்த வர்களும் இந்த ஷாவின் வாழ்க்கையும் எழுத்தும் மு.வ. வின் வாழ்விலும் எழுத்திலும் எப்படிப் பிரதிபலித்தன என்பதை அறிவர் என மட்டும் இங்கே சுட்டிக்காட்டி மேலே செல்கிறேன்.

ஷா மேற்கொண்ட சில நெறிகளை மு.வ. அவர் களும் கொண்டமைக்கு இரண்டொரு சான்றுகளையும் காணல் வேண்டும். இவர்களை இணைத்து எழுதிய தனிநாயக அடிகளார் தமிழாசிரியராகிய மு.வ. நாடகாசிரியராகிய ஷாவை விடச் சில வகைகளில் மேம்பட்டவர் எனக் குறித்துள்ளமையும் ஈண்டு எண்ணத்தக்கது.(தமிழ் கல்சர் 10, இதழ் 2, 1963 ப. 8)

ஷாவினைப் போன்றே மு,வ. அவர்களும் தாம் கொண்ட கொள்கைகளையும் கருத்துகளையும் பாத்திரங்கள் வாயிலாக உபதேசம் செய்கின்றார் என்பது இருவர்

நூல்களையும் பயின்றவர் நன்கு அறிவர். மேலும் சில கற்பனைப் பாத்திரங்களைப் படைத்து அவர்கள் வழி உலகுக்கு வழிகாட்டும் நெறியும் இருவராலும் போற்றப் பெற்றதாகும். ஷா தம் இளமை வயதிலேயே பிறவாத ஒரு தங்கையைப் பிறந்ததாகக் கற்பனை செய்து கொண்டமை போன்றே (My Dear Dorathy) மு. வ. அவர்களும் தம்பி, தங்கைகளைக் கற்பனை செய்து கொண்டு, அவரைப் போன்றே கடித வாயிலாகக் கருத்துகளையும் சூழலையும் நாட்டு நிலையையும் பிறவற்றையும் விளக்கும் மரபினையும் உணர்தல் வேண்டும். மேலும் இப்படியே வெல்ஸ் எழுதிய உருத்தெரியா மனிதனே (The Invisible Man) மண் குடிசையில் ஆதிக்கம் செலுத்துகிறன். பெண்களுக்கு ஏற்றமும் சிறப்பும் பெற்றியும் தருவதில் மு.வ., ஷாவிற்கு இளைத்தவரல்லர் என்பதையும் இவர்தம் நாவல்கள் நமக்கு விளக்குகின்றன. (சிலவற்றை அவ்வந் நாவல்களைப் பற்றி காணும்போது இயலுமாயின் காணலாம்). அன்பு, காதல், வறுமை, வாழ்க்கைப் போராட்டம், பொருளாதாரச் சமத்துவம், கலை போன்றவற்றிலும் இருவர் கருத்தும் பெரும்பாலும் இணைந்து செல்வதையே காண்கிறேம். இவ்வாறே பல காணலாம். என்னும் மற்றென்று விரித்த லாகும் என்ற நிலை கருதி இந்த அளவோடு அமை கின்றேன்.

அறிஞர் மு.வ. அவர்கள் திரு.வி.க. வொடு பழகிய தன்மையினை முன்னர்க் குறிப்பிட்டேன். மு.வ. வின் தமிழ் நடையே திரு.வி.க. வின் நடை தான் எனப்பலர் கூறுவதை நீங்கள் அறிவீர்கள். ஷாவினைப் போன்றே திரு.வி.க வின் நடைமட்டுமன்று கருத்து முதலியனவும் மு.வ. வைப் பற்றிப் பிணித்தன எனல் மிகையாகாது. இவர் திரு.வி.க. பற்றியும் தனியாக ஒரு நூல் எழுதியுள்ளார். மேலே ஷாவைப் பற்றிக் காட்டிய குறிப்புகளைப் போன்று இதிலும் பல காட்டலாம். என்றுலும் அளவும் அமைப்பும் கருதி ஓரிரு இடங்களை மட்டும் ஈண்டுச் சுட்டி மேலே செல்கிறேன்.

"அவர்தம் வாழ்க்கை திருக்குறளின் அறத்துப் பாலுக்கு ஒரு விளக்கம் எனலாம். அவ்வாழ்க்கையில் பாயிரம் உண்டு. இல்லறம் உண்டு; துறவறம் உண்டு. ஊழ்வலியும் உண்டு. இல்லறத்தின் சிறப்பை உணர்ந்தவர். துறவறத்தில் தூய்மை பெற்றவர். அன்பு அருளாய்க் கனிந்த வாழ்வு அவர்தம் வாழ்வு எனச் சுருங்கக் கூறலாம்." (திரு.வி.க. ப. 6-7)

என்று திரு.வி.க. வின் வாழ்வினைத் தெளிவாகக் காட்டியுள்ளார் மு.வ. இவரே அவர் மொழி நடையைப் பற்றிக் கூறிய ஒரு கருத்தை இங்கே காட்ட நினைக்கிறேன்.

"திரு.வி.க. வின் நடையில் செந்தமிழ்ச் சொற்கள் அழகாகப் பயின்று வரும். பத்திரிகைக்கு உரிய நடை என்று அவரே குறிப்பிட்ட போதிலும் மற்றப் பத்திரிகைகளின் நடைக்கும் அவருடைய தேச பக்தன்-நவசக்தி பத்திரிகைத் தமிழ் நடைக்கும் பெரிய வேறுபாடு இருந்தது ... இலக்கியத்தில் பயின்ற செஞ் சொற்களை இயல்பாக எடுத்தாளும் திறன் அவரிடம் என்றும் காணப்பட்டு வந்தது." (ப. 80)

"அவருடைய எழுத்திலும் பேச்சுமுறையே செல்வாக்குப் பெற்று விளங்கியது. நவசக்தியில் எழுதும் தலையங்கமேயானாலும், தனியே எழுதும் நூலின் பகுதியே ஆனாலும், சொற்பொழிவின் போக்கில் அவருடைய நடை அமைந்துவிடும்." (ப. 81)

"இயற்கையே அவர்க்கு ஒரு பல்கலைக் கழகமாகத் தோன்றியது. அக்கழகத்தில் பயின்ற மாணவன் யான் என்று தம்மை அறிமுகப் படுத்திக்கொண்டு மகிழ்ந்தவர் அவர். அவ்வகையில் அவர் எழுதிய எழுத்துக்கள், பாடிய பாட்டுக்கள் பலப்பல. (ப. 150)

எனவும் இன்னும் பல வகையிலும் திரு.வி.க. வுடன் பழகியும் அவர் தம் நூல்களைப் படித்தும் மு.வ. அவர்கள்

இலக்கிய வாழ்வைத் திறனுய்ந்து எழுதிய எழுத்துக்கள் பல. இவர்களைப் பற்றி மட்டுமன்றிக் காந்தி அண்ணல், கவிஞர் தாகூர் ஆகிய நூல்கள் இரண்டிலும் அந்த இரு பெரியவர்களைப் பற்றி எழுதிய கருத்துக்கள் எத்தனையோ என்முன் நிழலிடுகின்றன. ஒன்றிரண்டு கண்டு மேலே செல்லலாம். தாகூரின் படைப்புக்களைப் பற்றிக் கூறிய கருத்துகளுள் ஒரு சில:

"அவருடைய சிறுகதைகள் சுவை மிகுந்த கதைகள். காபூலிவாலா முதலான பல கதைகளும் படிப்பவரின் உள்ளத்தைக் கவரும் சிறப்பு வாய்ந்து விளங்குகின்றன. அவற்றில் அவருடைய நகைச் சுவையும் வேடிக்கையுணர்வும் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு சிறுகதையும் ஒவ்வொரு பண்பை விளக்கி ஆசிரியரின் உள்ளத்தைப் புலப்படுத்துகின்றன. தாகூர் தம் வாழ்க்கையில் கண்டும் கேட்டும் அறிந்த நிகழ்ச்சிகளைக் கொண்டு இத்தகைய உணர்வுமிக்க கதைகள் பல எழுதி யுதவினர். அவைகள் இன்று இலக்கிய மணிகளாகத் திகழ்கின்றன. (தாகூர் ப. 57)

"தாகூரின் கற்பனைவளம் உலகத்து அறிஞர் எல்லாரும் போற்றத் தக்க பெருமை உடையது. உயர்வு நவிற்சி மிகுதி இல்லாமல், கண்டும் கேட்டும் தாம் உணர்ந்தவற்றைக்கற்பவரின்மனக்கண்ணிற்குக் காட்டவல்ல கற்பனைச் சொல்லோவியங்களை அவருடைய பாடல்களில் மட்டுமல்லாமல் கடிதங் களிலும் காணலாம்." (ப. 62)

இவ்வாறே தாகூரின் பிற சிறப்பியல்புகளையும் வாழ்க்கை நெறி முறைகளையும் நூல் முழுதும் காட்டிக் கொண்டே செல்கிருர். இவற்றை இவர்தம் எழுத்துக்கும் சாற்றலாம் என்பதைக் கற்றவர் அறிவர்.

இப்படியே அண்ணல் காந்தி அடிகளாரைப் பற்றி எழுதிய நூலிலும் பல வாழ்விலக்கியக் கோடுகளைச் சுட்டிக் காட்டலாம். முன்னுரையிலேயே மு.வ. அவர்கள்,

'அண்ணலைப் புகழ்வோர் பலர்; போற்றுவோர் பலர்; வழிபடுவோர் பலர். ஆயினும், அவருடைய வாழ்க்கை உணர்த்தும் உண்மைகளை நாடுவோர் சிலர்; அவற்றை உள்ளவாறு உணர்வோர் மிகச்சிலர், உணர்ந்து பயன்படுத்துவோர் மிகச்சிலரே. அவருடைய வாழ்க்கை, படைப்பின் சட்டங்களை ஒட்டி இயங்கிய தூயவாழ்க்கை; ஆகையால் அது எல்லா மக்களுக்கும் எடுத்துக்காட்டாக விளங்கும் நல்வாழ்க்கையாகும்"

என்று தாம் இந்த நூல் எழுதிய நோக்கத்தையும் குறிப்பிட்டு, உள்ளே காந்தி அடிகளாரின் உயர்ந்த வாழ்க்கைப் பண்புகள் பலவற்றையும் விளக்கிக் காட்டியுள்ளார்.

"காந்தியடிகள் மூளையையும் அளவு கடந்து வளர்க்க விரும்பவில்லை. ...அறிவுப் பசியையும் எல்லை கடந்து போகாமல் ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிறுத்தி கொள்ள வேண்டும் என்பது அவர் கருத்து. தேவை இல்லாத அறிவை மூளையில் திணித்து வைத்துக் கொண்டிருப்பது நல்வாழ்வுக்குக் கெடுதி என அவர் எழுதியுள்ளார். இந்தக் காலத்துக் கல்வி முறையை அவர் கடிந்ததற்கும் அடிப்படைக் காரணம் இதுதான்." (காந்தி அண்ணல், ப. 18-19)

"அண்டை அயலாருக்கு இல்லாத இன்பங்களை நுகர்வது பாவம் என்று நீதி தர்மத்தில் அவர் எழுதியிருக்கிறார். இந்த உணர்வுதான் அவர் வாழ்க்கையை மிகமிக எளிய நிலைக்குக் கொண்டு போய்விட்டது... முழங்கால் வரையில் அணிந்த வறுமைக்கோலம் அன்று முதல்தான் அவருடைய தவக் கோலமாக விளங்கத் தொடங்கியது." (ப. 43)

"காந்தி அடிகளிடம் எதையும் அளந்து பார்க்க இரண்டு அளவு கருவிகள் இருந்தன—உண்மை ஒன்று இன்னா செய்யாமை மற்றொன்று." (ப. 70)

2

இவ்வாறு நூல் முழுதும் காந்தி அடிகளாரின் பண்பினைப் பாடியுள்ளார். இத்தகைய நல்ல பண்பாளர் தம் நூல்களும் வாழ்க்கை முறைகளும் பிற நல்லியல்புகளுமே வழி காட்டிட, டாக்டர் மு.வ. அவர்களும் நேரிய வாழ்வில் வாழ்ந்து, வாழ்க்கை இலக்கியத்தையே திறனாய்ந்து, நமக்கும் நல்ல பல இலக்கியங்களைத் தந்துள்ளார். இனி அவர்தம் நூல்களுள் பிறவற்றைக் காணலாம்.

## நாவல்களும் பாத்திரங்களும்

தாம் வாழ்ந்த வாழ்வின் சூழலை ஒட்டியும் ஊர்கள்-பிற சார்புகளை ஒட்டியும் தம் நாவல்களை மு. வ, எழுதியுள்ளார் என முன்னரே சுட்டியுள்ளேன். இவர்தம் நாவல்களில் வரும் சில பாத்திரங்களும் இவர் சந்தித்தவர்களாக உள்ள னர். மேலும் அந்நாவல்களில் உலகநிலை, இந்திய நாட்டு நிலை, தமிழ்நாட்டு நிலை, தமிழர் நிலை ஆகியவற்றையும் தம் பாத்திரங்கள் வாயிலாகச் சுட்டிக் காட்டியுள்ளார். அந்த அடிப்படையில் இவர் வாழ்விலக்கியத்தை ஆய்ந்த வகை யினைச் சிறிது காண்போம். இவர் வாழ்ந்த நாடும் சுற்றுச் சார்புமே இவர்தம் வாழ்விலக்கியங்களாகிய நாவல்களை உருவாக்கின எனலாம்.

முறை, மரபு முதலிய நெறிமுறைகளை இவர் நாம் மேலே கண்டபடி ஷா, காண்டேகர் போன்ற பிறமொழி ஆசிரியர்களைப் பின்பற்றினாலும், கதைகளின் அமைப்பு, போக்கு, நிகழ்ச்சி முதலியவற்றைத் தம்மைச் சார்ந்த சுற் றுப்புற நிலையிலேயே ஆக்கிக் கொண்டுள்ளார். மேலும் அந்த நாவல்களில் தாம் விரும்பிப் பயின்ற நூல்களைப் போற்றும் பாத்திரங்களைப் படைப்பதோடு அவற்றின் வழித் தாம் கொண்ட கொள்கைகளைப் பற்றியும் விளங்க வைக்கிறார். இவர் ‘அந்த நாவல்கள் இத்தகைய கொள்கை களைப் பரப்புவதற்கெனவே அமைந்தவையாதலால் அவ் வாறு எழுதினேன்’ என்று சொல்லுவர். ‘பேதி மருந்தினை வெல்ல உருண்டைக்குள் வைத்துக் கொடுத்து அதை உண்ணவைத்து, உடல் மாசு நீக்குவது போன்று, அறக்

கருத்துக்களை உள்ளீடாக்கி இந்த நாவல்களாகிய வெல்ல உருண்டைக்குள் அவற்றை அமைத்துத்தந்தால் சமுதாய மாசு நீங்காதா' என்று எண்ணி இவ்வாறு செய்வதாகக் கூறுவார். எனவேதான் இவர்தம் நாவல்கள் சிலவற்றில் கதைப் போக்கினைவிட — கற்பனையைவிட — இத்தகைய உபதேசங்கள் அதிகமாக இருக்கக் காண்கிறோம். மேலும் சுற்றிப் பறந்து வரும் குருவிகளும் இவர் வீட்டின் பக்கத்தில் வளர்ந்த முருங்கை மரமும் இவர் நாவல்களில் இடம் பெறும். இவற்றுடன் சென்னை போன்ற நகரங்களின் ஆரவார 'நாகரிக' வாழ்வும் கிராமப்புற அமைதி வாழ்வும் காட்டப் பெற்று, நகர வாழ்வின் சிக்கல்கள் நன்கு புலப்படுத்தப்பெறும். இவ்வாறு இவர்தம் சுற்றுச் சார்புகளை எண்ணி எண்ணியே இவர்தம் நாவல், சிறுகதை போன்றவற்றை ஆக்கியுள்ள தன்மை எல்லா நூல்களிலும் நன்கு விளக்கமுறும். எனினும் நான் இங்கே ஓரிரு நூல்களை எடுத்துக் கொண்டே அவற்றைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

## முதல் நாவல்

இவருடைய முதல் நாவல் 1948இல் வெளிவந்தது, எனினும் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே 45-46இல் இது எழுதப்பெற்றது. நான் கோடை விடுமுறைக்கு ஊருக்குச் சென்றிருந்தபோது, அந்த வீட்டில் இருந்து கொண்டுதான் இந்த முதல் நாவலை இவர் எழுதி முடித்தார். முடித்ததும் தம்மிடம் பயின்ற மாணவர் ஓரிருவரை அந்த வீட்டிலே விடுமுறையில் வரச்செய்து, அதைப் படித்துக் காண்பித்து, பிறகே அதை வெளியிட ஏற்பாடு செய்தார்.

இந்த நாவல் தொடக்கத்திலேயே முருங்கை மரமும் கிளிகளும் 'படித்தவர்க்கு' என்ற தலைப்பில் இடம் பெறுகின்றன.

> "அந்த முருங்கை மரத்திலிருந்து இரண்டு கிளிகள் ஒன்றன்பின் ஒன்றாக எழுந்து பறந்தன. அவை தென்னை மரத்தில் சென்று ஓலையில் மறைந்திருந்தன. உடனே சிறிது நேரத்தில் வெளிவந்தன.

"காற்று ஆரவாரம் செய்தபோது இந்தக் கிளிகள் எங்கே இருந்தனவோ தெரியவில்லை. இப்போது பழையபடி வந்துவிட்டன, தென்னை மரத்தைச் சுற்றுகின்றன.

"ஆறு கிளிகள் இருக்கின்றன. ஆறு கிளிகள் — மூன்று குடும்பம்–மூன்று இணை. எது எதன் இணையோ தெரியவில்லை. பொறுத்துப் பார்ப்போம். எப்படியும் தெரிந்துவிடும்."

இந்தத் தொடர்கள் நூலுக்குள் வருவனவே. எனினும் நூலுக்கு முன்பே 'படித்தவர்க்கு' என்று தலைப்பிட்டு இவற்றை மு. வ. காட்டி இருப்பதன் நோக்கம் இந்தக் கிளிகளும் மரங்களும் இவரை ஆட்கொண்டமையே. இவை பாத்திரங்களைச் சுட்டும் வகையிலும் (பக். 35, 77, 78, 79) அமைகின்றன என்றாலும், இந்த நாவல் உருவாகும் நிலையில் இவர் உட்கார்ந்திருந்த மேல் வீட்டுச் சன்னலை ஒட்டியிருந்த முருங்கை மரம், தூரத்தே இருந்த ஒற்றைத் தென்னை மரம், அவற்றில் கீச்சிட்டுப் பறந்து பறந்து வந்த கிளிகள் ஆகியவையே அடிப்படையாக அமைந்தவை என்பது அன்று இவருடன் இருந்தவர்களுக்கே புலனாகும். கிளிகள் போன்று (ஆணும் பெண்ணும் இயைந்து) மனிதன் தன் மனைவியுடன் ஒன்றி வாழவில்லையே என்ற ஏக்கம் மருதப்பன் வாயிலாக வெளிவருவதை நன்கு காணமுடியும் (பக். 46). அப்படியே குழந்தையை ஒட்டி அவர்தம் வாழ்வு ஒன்றி இணைவதை எண்ணும்போது இவருக்குத் தம் கண்முன் கிளிகள் தென்னை மரத்தைச் சுற்றி ஒற்றுமையாகப் பறப்பது தெரிகிறது (பக். 48)

இந்த நூலில் இவர் மூட நம்பிக்கையைச் சாடும் இடங்கள் பல. போலிச் சாமியார்கள் தன்மையினையும் (பக். 10—13) சோதிடத்தால் வரும் தொல்லையினையும் (பக். 23) மூட நம்பிக்கை பற்றியும் (பக். 24-28), பல்லி சொல்வது

பற்றியும் (பக். 74) — இவைபோன்ற பிற மூட நம்பிக்கை களையும் சாடுகிறார்.

இவர் நூல்களில் சங்க இலக்கிய வாடை வீசுவதைக் காணமுடியும். பெற்ற மகளுக்குத் தாய் வீடு இனிமை தராது என்பதும், கணவனோடு கலந்து வாழும் தனி வாழ்வே சிறந்ததென்பதும் தாயின் கொடுமையிலும் கணவனோடு கடக்கும் வெஞ்சுரம் இனிமை வாய்ந்த தென்பதும் சங்க இலக்கியங்கள் தரும் விளக் கங்கள். இவற்றை இவர்தம் செந்தாமரையில் காட்டுவது எண்ணத் தக்கது.

> "குளிர்ந்த பொய்கையைவிட்டு நீரற்ற பாலை வனத்தை யார் விரும்புவார்கள்? பெற்றோரின் வீடு, வளர்ந்த மக்களுக்குப் பாலைவனம்தான். ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் பெற்றோரின் வீடு பாலைவனந்தான். பெற்றோர்கள் எவ்வளவோ அன்பு காட்டலாம். எத்தனை நெல்லிமரங்கள் இருந் தாலும் என்ன? பாலைவனத்தில் உயிர் போகாமல் காப்பாற்றலாம்; அவ்வளவுதான். வாழ்க்கையை வளம்படுத்த முடியாது." (செந். பக். 143).

இதில் மு. வ. அவர்கள் பெண்களை மட்டுமின்றி ஆண்களை யும் பிணைக்கிறார். மணமான ஆணும் பெண்ணும் தனித்து வாழ்தலே சிறப்புடைத்து என்பது இவர் கொள்கை. என வேதான் பெண்ணோடு ஆணையும் பிணைக்கிறார். மேலும் இவருக்கு இனிய 'மரங்களின் மேற்கோள்' இங்கும் எடுத் தாளப் பெறுகிறது. ஆம்! 'நெல்லிமரம் உயிர் வளர்க்கும் வாழ்க்கையை வளம்படுத்துமா?' எனக் கேட்கிறார். சங்க இலக்கியங்களை வெளிப்படையாகவே தொட்டுக்காட்டும் இடங்கள் பல. அவற்றைப் பின்பு காண்போம்.

தான் முதலில் பார்த்த 'கிளார்க்' வேலையை விட்டு ஆசிரியர் வேலைக்கு வந்த காரணத்தையும் 'இளங்கோ' என்னும் பாத்திரத்தின் வாயிலாக விளக்குகிறார்.

"நானும் என்னுடைய ஆபீஸ் கிளார்க்குகளின் செய்தியைச் சொல்லலாம் என்றால், அவை சுவையற்றவை. யந்திரங்களின் வாழ்க்கையில் - பேனா ஓட்டும் வாழ்க்கையில் - என்ன சுவை இருக்க முடியும்? ஒரு கால் சுவைபடும் குறிப்பு ஏதாவது இருந்தாலும், அதை நான் ஒரு ரிப்போர்ட் ஆக்கிக் கூற முடியுமே தவிர பத்திரிகை ஆசிரியர் போல சுவை கெடாமல் எழுதி வெளியிடவும் முடியாது. பள்ளிக்கூட ஆசிரியர்போல் தெளிவாகச் சொல்லவும் முடியாது. ஆகையால் ஏதாவது பேசவேண்டுமே என்று எண்ணி என் அன்னையைப்பற்றியே பேசத் தொடங்கினேன்." (செந். ப.91)

என்று இளங்கோவின் சொல்லாக இவர் தம் உள்ளத்தையும் வாழ்வையும் எடுத்துக் காட்டிவிட்டார். இவருக்குப் பத்திரிகை ஆசிரியராகவும் விருப்பம் ஒருகால் இருந்தது. இதைத் திரு. வி. க. அவர்கள் ஒருமுறை சுட்டியுள்ளார் எனினும் பள்ளி ஆசிரியராக - கல்லூரி ஆசிரியராக இருந்துகொண்டு பல பத்திரிகைகளுக்கு அந்த ஆசிரியர்கள் செய்யும் தொண்டுகளுக்கு மேலாக, எண்ணற்ற கட்டுரைகள் எழுதிவிட்டார். பத்திரிகை ஆசிரியர் சுவைபட எழுதவேண்டிய இன்றியமையாமையையும்பள்ளியாசிரியர் எடுத்த பொருளைத் தெளிவாக விளக்கவேண்டிய முறைமையினையும் சுட்டிக்காட்டிய இவர், அவ்வாறு இருவகையிலும் சிறந்து வாழ்ந்தார் என்பதைத் தமிழுலகம் நன்கு அறியும். இத்தகைய குறிப்புகள் பல இவர்தம் பிற நாவல்களிலும் உள்ளன.

"குறித்த நாளுக்கு முன்பே ஆராய்ச்சிக் குறிப்புகளைத் திரட்டி ஒழுங்குபடுத்திக் கொண்டேன். தடை இல்லாமல் பேசத் தக்கவாறு சிறு தலைப்புகளையும் குறித்துக்கொண்டேன்" (கள்ளோ காவியமோ. பக். 147 ).

என்று கல்லூரி ஆசிரியர் ஒருவர் மாநாட்டுக்கோ பிற கூட்டங்களுக்கோ போகும்போது எவ்வாறு பேசப்பெறும் பொருள் பற்றிய குறிப்பை அமைத்துக்கொள்ள வேண்

டும் என்று ‘அருளப்பர்’ என்னும் பாத்திரத்தின் வாயிலாகச் சுட்டுகிறார். மு. வ. அவர்களும் எங்கே பேசச் சென்றாலும் இந்த வகையில் ஆய்ந்து குறிப்பெடுத்துக்கொண்டு போவது வழக்கம்.

## பாத்திரப் படைப்பு

இவர்தம் நாவல்களிலும் பிற நூல்களிலும் இவரொடு கலந்தவர்தம் பெயர்களைப் பாத்திரங்கள் வாயிலாகவும் நேராகவும் வெளியிடுவார். உற்ற நண்பர்களைப் பற்றிய விமரிசனமாகவும் அதேவேளையில் நடந்த நிகழ்ச்சிகள் உண்மையெனக் காட்டுவனவாகவும் அவை அமைவதைக் காணலாம். இரண்டொரு சான்று காண்போம்.

இவர் பச்சையப்பரில் பணியாற்றியபோது உடனிருந்த ஆசிரியருள் திரு. மகாதேவன் தத்துவப் பேராசிரியராக விளங்கினார். அவரிடம் இவர் ஈடுபாடு கொண்டார். அவர்தம் மணமாகாத எளிய பண்பட்ட வாழ்வைப் பல முறை பாராட்டியுள்ளார். அவரிடம் பயின்ற மாணவராக ஒரு பாத்திரத்தையும் படைத்து, அப்பாத்திரத்தின் வழியே ஒரு சில உண்மைகளை இவர் வெளியிடுகிறார்.

> "திருமணமே செய்துகொள்ளாமல் வாழ்க்கையை நடத்திவிடலாம் என்று பலமுறை முடிவு செய்ததுண்டு. அது பொருத்தமான முடிவுதான். என்னைப்போல் அமைதியை விரும்புகிறவர்களுக்கு இந்தக் காலத்து ஆரவாரப் பழக்கம் இல்லாமல் போகிறது. ஆனால் உலகமோ ஆரவாரம் நிறைந்தது. ஆதலால் உலகத்திற்குக் தகுந்தவாறு ஆரவாரம் இல்லாதவர்கள் குடும்ப வாழ்க்கை நடத்த முடியாது. வருகின்ற மனைவி எந்தப் போக்கில் பழகியிப்பாளோ? நல்லவளாக இருந்தாலும் சுற்றுப்புறம் கெடுத்துவிடுவது இயற்கை. ஆகையால் திருமணம் செய்துகொள்ளாத தனிவாழ்க்கை நல்லது என்றே பல நாளாக எண்ணித் துணிந்திருந்தேன்.

> பேராசிரியர் மகாதேவனிடம் படித்ததால் பல உண்மைகளைக் கற்றுக் கொள்ள முடிந்தது. தத்துவப் பாடமாக எடுத்துக் கொண்டு எம். ஏ. படிப்பவர்கள் அவற்றைத் தெரிந்து கொள்ளா விட்டால் பயனில்லை. அவற்றை உண்மையென்று நம் நாட்டுப் பெரியவர் எத்தனையோ நூற்றுண்டுகளாக எடுத்துக் கூறிவருகிருர்கள். ஆனல் கற்றவர்களாவது அந்த நெறியில் நிற்க வேண்டாவா." (செந். 111-112)

என்று திருநாதன் வாக்காக மு. வ. பல உண்மைகளை உணர்த்திவிட்டார். பேராசிரியர் மகாதேவனுக்கு ஏற்றம் தருவது மட்டுமன்றி, மணவாழ்வு அமைய வேண்டிய வகையினையும் சுட்டுகிருர். (இதுபற்றி வேறு நூல்களிலும் இந்நூலிலும் பலப்பல வகையில் விளக்கம் தந்துள்ளார்.) இதில் மேலும் 'கற்க, அதற்குத் தக நிற்க' என்ற உண்மை நெறியினையும் சுட்டிக் காட்டத் தவறவில்லை.

மு. வ. அவர்கள் இவ்வாறே உற்ற நண்பர் பலர் பெயர்களையும் அவருடைய சுற்றத்தார் பெயர்களையும் எடுத்தாளுவதில் இன்பம் காண்பவர். யான் கண்ட இலங்கையில் இவர் இவ்வாறே சிலர் பெயர்களை எடுத்தாளுவதைக் காணலாம். அவருடன் இலங்கைக்குச் சென்றவன் நான். இலங்கைச் செலவு பற்றி இவர் நூல் எழுதப் போவதாகச் சொன்ன போது, அதில் என் பெயரைக் குறிப்பிட வேண்டா என்று கேட்டுக் கொண்டேன். எனவே அதில் 'நண்பர்' என்று பலவிடங்களில் என்னைக் குறித்துள்ளார். ஆயினும் என் மகள் மங்கையர்க்கரசியைப் பற்றிப் பலவிடங்களில் தன் மகன் அரசுக்குக் கடித வாயிலாக எழுதிய அந்நூலில் குறிப்பிட்டுள்ளார். ஓர் இடத்தை மட்டும் இங்கே குறிக்கிறேன்.

> "பெரியவர்கள் ஆகிய நாங்கள் மட்டுமல்ல, நம் மங்கையர்க்கரசியும் அஞ்சாமல் கலங்காமல் கடல் காட்சியையும் மலை ஆறு முதலிய காட்சிகளையும் பார்த்துவந்தாள். மங்கையர்க்கரசி உன்னைவிட நான்கு

வயது சின்னவள். ஒன்பது வயதுள்ள பெண் அஞ்சு வாள் என்று நீயும் அம்மாவும் எண்ணியிருப்பீர்கள். மோட்டாரில் காஞ்சிபுரத்திற்குச் செல்வதைவிட மகிழ்ச்சியாகவே மங்கையர்க்கரசி விமானத்தில் எங்க ளோடு பறந்துவந்தாள்." (யான் கண்ட இலங்கை. ப. 19)

இவ்வாறே வடநாட்டு யாத்திரையிலும் சிறப்பாகக் காஷ்மீர் யாத்திரையிலும் எங்கள் இரண்டு குடும்பங்களும் ஒன்றிச் சென்றன. அந்த யாத்திரையின் முடிவில் அதைப்பற்றியும் ஒரு நூல் எழுதப் போவதாகவும் ஆனல் அது தனித்த நூலாக இல்லாமல் கதைப் போக்கில் அமைந்திருக்கு மென்றும் சொன்னர். அதிலேயும் நான் என் பெயரைக் குறிப்பிடவேண்டா எனக் கேட்டுக் கொண்டேன். எனவே என் மகன் மெய்கண்டானைச் சான்ருேராக்கி அந்த 'மண் குடிசை'யில் சேர்த்துக் கொண்டார்.

இவ்வாறே இவர் நாவலில் வரும் பல பாத்திரங்களும் இவரொடு பழகியவராகவும் அறிமுகமானவராகவும் உள்ள மையை அறிந்தோர்கள் உணர்வர். அப்படியே கதைகளில் வரும் பல நிகழ்ச்சிகளும் உண்மையில் நடந்தனவே என்ப தையும் உணர்தல் வேண்டும். அதனுலேயே இவருடைய கதைகள் பலவும் இவருடைய ஊர்களாகிய வேலம், திருப் பத்தூர், ஆர்க்காடு, வேலூர், சித்தூர் அவற்றைச் சேர்ந்த சிற்றூர்கள் ஆகியவற்றில் நிகழ்ந்தனவாக உள்ளன. கோடை நாட்களில் பெங்களூரில் வாழ்ந்து அதன் சூழலை நன்கு அறிந்த காரணத்தால் சில கதைகளில் பெங்களூர் இடம் பெறும். அப்படியே காசி, தில்லி, பம்பாய், காஷ்மீர் போன்ற இடங்களுக்குச் சென்ற நிலையிலேயே அவைகளை யும் அவற்றில் நடந்த சில நிகழ்ச்சிகளையும் இணைத்துத் தம் கதைகளின் போக்குகளை அமைத்துக் கொண்டார். இப்படி யே இவர் மலேயா போன்ற இடங்களுக்குச் சென்ற வகைகளையும் இப்பல்கலைக் கழகத்துணைவேந்தரான பிறகு வெளிநாடுகள் சென்றிருந்தவற்றையும் பற்றியெல்லாம் தனித்தனியாகவும் தொகுத்தும் சில நூல்கள் எழுதத் திட்ட

மிட்டிருந்தார்; எனினும் நான் அவற்றைப் பெற வாய்ப்பு இல்லாமலேயே இவர் வாழ் நாள் முடிந்தது.

இவர் சுட்டிய சில பாத்திரங்கள் இன்றும் வாழ்கின்றார் கள். மலர் விழியில்(ப.55–57) சில நிகழ்ச்சிகள்வருகின்றன. அவற்றுள் வரும் பாத்திரங்களும் செயல்களும் கற்பனை அல்ல என்பதை இவரே என்னிடம் சொல்லியுள்ளார். அவருள் சிலரும் இன்று வாழ்ந்து கொண்டு தான் இருக்கிறார்கள். அப்படியே அம் மலர்விழியில் குறிக்கப் பெறும் திருக்கழுக்குன்ற நாகசுரம் (ப. 38) உண்மையில் இவரை ஆட்கொண்ட ஒன்று. அந்த இசையில் இவர் பெரிதும் கட்டுண்டார். நானும் அவரும் கோயிலுக்குச் சற்றே தொலைவிலுள்ள சத்திரத்தில் சில நாட்கள் தங்கி யிருந்த போது, ஒருநாள் மாலை அச்சத்திரத்தின் திண்ணை யில் நாங்கள் இருக்க, அப்போது எழுந்த அந்தத் திருக் கோயிலின் நாதத்தில் ஈடுபட்டு, அதன் இனிமையை அன்று இவர் போற்றிய நிலை இன்றும் என் கண்முன் நிழலிடு கின்றது. தான் வாழ்ந்த சேத்துப்பட்டுக் கந்தப் பிள்ளைத் தெருவினை – தன் நூல்கள் பல உருவான அந்தத் தெரு வினைச் செந்தாமரையில் (ப. 85) குறித்துள்ளார்.

## பொன்னெனப் போற்றியவை

இவ்வாறே இவர் ஈடுபாடு கொண்டு பயின்ற நூல்கள் உளத்தால் போற்றிய நல்ல சமயத் தலைவர்கள், சான் றோர், பெரியவர் ஆகியோர்களை யெல்லாம் பல நாவல் களில் பாத்திரங்கள் வாயிலாக நன்கு நமக்கு நினைவூட்டு கின்றார். அவற்றில் எவ்வாறு ஈடுபட்டு நின்றார் இவர் என்பது இவரொடு பழகியவருக்கு நன்கு தெரியும்.

'திலகம் உள்ளொளி படித்துக் கொண்டிருந்தாள்' (செந். ப. 98) என்று தாம் திரு. வி.க.வின் உள்ளொளியில் கொண்ட ஈடுபாட்டை விளக்குகிறார். 'பெண்ணின் பெரு மையை மலர்விழியில் சுட்டிக் காட்டுகிறார் (ப. 28). நவசக்தி அகல்விளக்கில் (311) சுட்டப்பெறுகிறது. 'குற்றம் உணர் வான் குணவான்' என்று அந்த நமச்சிவாய முதலியார்

புத்தகத்தில் இருக்கும் பாடம் இவர்கள் படித்ததில்லையோ என்று மற்றொரு பாத்திரத்தின் வழி (செந். 142) கா. நமச்சிவாய முதலியார் எழுதிய நூல்களை நமக்கு நினைவூட்டுகின்றார். பர்னட்ஷாவின் வாக்கியங்கள்-சொன்னவை அனைத்தும் வாழ்வில் உண்மை என்பதைச் (கள்ளோ-ப. 76-77) சுட்டிக் காட்டுகிறார். திருக்குறளை ஆங்காங்கே பலப் பல விடங்களில் தொட்டுக் காட்டுவதோடு (கள். 75) அந் நூலில் பயின்று பலர் வாழ்வில் திருத்தம் பெற்றதையும் சுட்டத் தவறவில்லை.

பெரும்பாலும் புராணங்களை மு.வ. அவர்கள் நம்புவது இல்லை. என்றாலும் வாய்மையைக் கடைப்பிடிக்கும் வாழ்க்கையை மேற்கொண்டதனால் அரிச்சந்திர புராணத்தில் மட்டும் அதிகப்பற்று வைத்திருந்தார். அண்ணல் காந்தி அடிகளார் அரிச்சந்திரன் கதையால் தெளிவுற்றமையும் இவருக்கு அவ்வரலாற்றில் பற்று உண்டாகக் காரணமாகும். எனவேதான் அரிச்சந்திர புராணத்தில் ஒரு பாடலையே எடுத்துக் காட்டி அந்தப் பாடலைப் பாடிய பாத்திரம் கண்ணீர் ததும்பிய நிலையினையும் (பாவை ப. 71) சுட்டிக் காட்டுகின்றார். அது மட்டுமன்றி 'நாள்தோறும் அரிச்சந்திர புராணம் படித்தால் மனம் உறுதிப்படும் என்று நான்காம் வகுப்பில் படித்த போது அவர் ஆசிரியர் சொன்னாராம் (ப. 72) என்று பாத்திரத்தின் மேலேற்றித்தன் சொந்த அனுபவத்தையே சொல்லுகிறார்.

உலகுக்கு அறிவுறுத்துவது போன்று-மாணவர்களுக்கு அறிவுறுத்துவது போன்று மு. வ. அவர்கள் சில நூல்களைக் கட்டாயம் படிக்கவேண்டும் என வற்புறுத்துவர். கலெக்டர் செல்வநாயகம் வழியாக (மலர் ப. 28) 'தம்பி' நீ பத்தாவது படித்திருக்கிறாய் அல்லவா? போதும், தமிழில் திருக்குறள், புறநானூறு ஏதாவது படித்து வா, ஆங்கிலத்தில் தாகூர், டால்ஸ்டாய் படித்து வா. அதன் பயன் இப்போது தெரியாது. என்னைப் போல் வயதான பிறகுதான் தெரியும். முதலில் தொல்லையாகத்தான் இருக்கும். இருந்

தாலும் விடாதே. பிறகு அது உன்னை விடாது' என்கிறார். அப்படியே பாரதி பாடலையும் அருட்பாவையும் படித்து வரும் ஒரு பாத்திரத்தையும், அதனால் அப்பாத்திரம் செம்மையுற்ற நிலையினையும் நமக்குக் காட்டுகிறார். (மலர். 102) மாதவி கோவலர் நிலையில் உள்ளத் தெழுந்த கானல்வரி பாட்டாக மட்டுமன்றி அப்பாடல் பாடிய படமும்,'யானும் நீயும் எவ்வழி அறிதும்' என்ற குறுந்தொகைப் பாடல்வழித் தோன்றிய படமும் (மலர் 118) நம் கண் முன் காட்டப் பெறுகின்றன. தாயுமானவர் பைங்கிளிப் பாடல் போற்றப் பெறுகின்றது (செந். 125) 'கண்ணே கருத்தேஎன் எண்ணே எழுத்தே கதிக்கான மோனவடிவே' என்று இவர் அடிக்கடி உருகிப்பாடும் தாயுமானவர் பாடலும் பிற பாத்திரங்களின் வாயால் பாடப் பெறுகிறது (மலர். 170, அகல் 311).-தாயுமானவர் பைங்கிளிக் கண்ணியைப் பற்றித் தாம் பழகிய சிந்தாதிரிப்பேட்டைத் தமிழ்ச் சங்கத்தோடு இணைத்துப் பேசுகிறார் (செந். 125). 'நன்றுடையானை' 'தீயதில்லானை' என்றும் 'சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூறவென்னுள்ளம் குளிரும்மே' என்றும் இளங்குழந்தை ஞானசம்பந்தர் பாடிய தேவாரப் பாடல் அடிகள் (மலர் 175) அப்படியே நமக்கு நினைவூட்டப் பெறுகின்றன. ஷேக்ஸ்பியர் ஆம்லெட் நாடகமும் அதைத் தமிழில் மொழிப் பெயர்த்த சம்பந்த முதலியாரின் 'அமலாதித்யன்' என்ற நாடகமும் நமக்கு அறிமுகமாகின்றன. (மலர் 215) இந்த நூல் எழுதிய ஆண்டில் பம்மல் சம்பந்த முதலியார், பச்சையப்பர்தமிழ்மன்றஆண்டுவிழாவில் தாமே எழுதிய சபாபதி நாடகத்தைக் தாமே சபாபதி வேடம்பூண்டு நடித்துக் காண்பித்தார் என்ற நினைவு இருப்பவர்களுக்கு இவர் இத்தகைய நூல்களைப் பிணைத்தெழுதும் காரணங்கள் நன்கு விளங்கும். தாம் பயின்ற பழைய திருப்பத்தூர் பள்ளியின் தமிழாசிரியரையும் இவர் சுட்டத்தவறவில்லை.(மலர் 236) பச்சையப்பர் கல்லூரி நூலகத் தலைவரை எண்ணியே நூலகத் தலைவராக அருளப்பரின் தந்தையைச் சுட்டுகிறார்.(கள்ளோ 40) சிலப்பதிகார நூல் பலவிடங்களில் பல பாத்திரங்களால் எடுத்தாளகப் பெறுகின்றது. (மலர் 244. அகல் 311) மணிமேகலை

யின் அமுதசுரபி (மலர் ப. 278)நமக்குக் காட்டப்பெறுகின் றது.இவ்வாறு பாடல்களை எடுத்துக் காட்டுவது மட்டுமின் றித் தாயுமானவர்,இராமகிருஷ்ணர், இராமலிங்கர் போன் றோர் தம் வாழ்க்கை நெறிகளையும் அவற்றைப் பின்பற்றி மக்கள் வாழின் வையம் வாழும் என்ற உண்மையினையும் பல நூல்களில் பல இடங்களில் பல பாத்திரங்கள் வழியே இவர் சுட்டிக் காட்டுகிறார். இவ்வாறு தாம் பயின்ற பல பெரியவர்தம் நூல்களையும் அவற்றில் வரும் அடிகளையும் பாடல்களையும் விளக்கிக் காட்டி, பல பாத்திரங்கள் வாயி லாக உலகுக்கு அறமுணர்த்தும் நெறியினை இவர்தம் நூல் கள் அனைத்திலும் காணலாம். நான் இங்கே இரண்டொரு நூல்களை மட்டும் எடுத்துக்காட்டாகக் காட்டினேன். அனைத்தையும் இவ்வாறு சுட்டுவது விரிவாவதோடு கால எல்லையினையும் கடப்பதாகும். பயில்வார் இந்நிலையை நான் காட்டிய நூல்களைவிட, விட்ட பிற நூல்களிலும் அமைந்திருப்பதைக் காணக்கூடும் எனக்கூறி மேலே செல்கிறேன்.

சங்க இலக்கியங்களையும் அவற்றின் சிறப்பியல்புகளை யும் தனித் தனியாக மு. வ. அவர்கள் திறன்கண்டு திறன் காட்டி விளக்கி எழுதியுள்ளார். அவற்றுள் சிலவற்றை நாளைக் காண இருக்கிறோம். இங்கே இவர்தம் நாவல்களில் பாத்திரங்கள் வாயிலாகவும் பிற வகையிலும் சங்க இலக் கியங்களை எடுத்தாளும் சிறப்பினைக் கண்டு செல்லலாம். ஒன்றிரண்டு முன்னரே கண்டோம். மேலும் சில இங்கே காணலாம்.

மருதப்பன் வாயிலாகச் 'செந்தார்ப் பைங்கிளி' என்ற அகநானூற்றுப் பாடலை எடுத்துக்காட்டி,'என்ன அழகான ஓவியம்! ஓர் அழகான காதலியின் ஓவியம்! அல்ல—சிறந்த நுட்பமான காதல் ஓவியம். வாழ்க அக நானூறு என்று வாழ்த்தினேன்' (செந். 34) என்று அந்த மருதப்பனையே சொல்ல வைத்து, தாம் அந்த நூலிடமும் பாடலிடமும் கொண்ட உள்ள உணர்வை மு. வ. புலப் படுத்துகின்றார்.

வேறொரு இடத்தில் குறுந்தொகைப் பாடலொன்றி னைப் பொருள்வகையில் விளக்குகிறார் இவர். அக்குறுந் தொகைப் பாடலை வாழ்வொடு பிணைத்தே பாராட்டியுள் ளார். (செந். ப. 122-123)

"குறுந்தொகைப் பாட்டு நினைவில் இல்லை. ஒரு தலைவிதான் சொல்லுகிறாள். தோழிக்குச் சொல்லு கிறாள். தன் தாய்வீட்டுத் தோட்டத்துத் தேன் கலந்த பால் அவளுக்கு இனிக்கவில்லையாம். கணவனுடைய நாட்டுக் கலங்கல் நீர்தான் அவருக்கு இனிக்கிறதாம். அந்தப் பாட்டு வாழ்க்கையை எவ்வளவு நன்றாக எடுத்துக் காட்டுகிறது. எட்டு ரூபாய்ப் புடவை-எளிய வெள்ளைப் புடவை அவளுக்கு ஆனந்தமாக இருக் கிறது. அவளுடைய மகிழ்ச்சி முகத்தில் ஒளி வீசு கிறது."

என்று கூறி அப்பாடலில் பட்டுப் புடைவையினும் கண வர் வாங்கித் தந்த வெள்ளைப் புடைவையை உடுத்துவதில் கொள்ளும் மகிழ்ச்சியைக் காட்டுகிறார். அப்படியே உணவு பற்றிப் பேசும்போதும் "குறுந்தொகைக் காலத் தில் நான் இருந்திருந்தால் 'மிளகு நீரில் உப்பு இல்லாமல் போனால் என்ன? சமைத்தவள் அன்பைவிட வேறு சுவை ஏன்?' என்று பாடியிருப்பேன் எனப் பேச வைக்கிறார். மேலும் 'குறுந்தொகைப் பாட்டை அந்தக் காலத்தில் ஆசிரியர் பாடம் சொன்னபோது வேப்பங்காயாக இருந் தது. இப்போது விண்ணோர் அமிழ்தமாக இருக்கிறது' (செந். ப. 123) என்று காட்டி, இத்தகைய பாடல்கள் உண்மையில் உணர்ந்தால்தான் இன்பம் தருவன எனச் சுட்டுகிறார். இந்தப் பகுதியைப் படித்து நான் அவர்களிடம் 'குறுந்தொகைப் பாடல் நினைவில்லை' என்று ஏன் சொல்லு கிறீர்கள்; பாடலையே காட்டியிருக்கலாமே என்றேன். அவர்கள் அப்படிச் சொன்னால் சுவை போய்விடும். படிப் பவர் அது என்ன பாடல் என்று குறுந்தொகையை ஆராய் வார்கள். அப்போது இதுபோன்ற பல பாடல்கள் அவர் களுக்கு முன் நிற்கும். அவற்றையும் படித்துச் சுவைத்து

மேலும் மேலும் அவற்றைப் படிப்பார்கள். அப்படியே தொடர்ந்து நற்றிணை, அகநானூறு முதலிய சங்க இலக்கியங்களையும் பயிலத் தொடங்குவார்கள் என்று கூறினர். நான் அவர் உள்ளத்தையும் சங்கத் தமிழை நாட்டில் பரப்பும் நாட்டத்தையும் உணர்ந்து வியந்தேன்.

இதே மருதப்பனை மற்றொரு அகநானூற்றுப் பாடலைப் படிக்க வைக்கிறார். 'ஆதிமந்தி போலப் பேதுற்று இனை வேன் கொல்லோ' என்ற அடிகள் என் கண் எதிரே நின் றன'என இவர்தம் மருதப்பர் பேசுகிறார்.அகநானூற்றையாவது படிக்கலாம் என்று அந்தப் புத்தகத்தை அப்படியே திறந்த அவர்முன் இந்த அடிகள் நிழலிட்டனவாம். 'ஆதி மந்திபைத்தியமானதை எண்ணினேன்' என அவரையே ஒரு முடிவுரையும் கூறவைக்கிறார் மு.வ. (செந். ப. 68). 'புற நானூறும் அகநானூறும் படிக்கும் வரையில் மனத்தில் ஒருவாறு அமைதி இருக்கச் செய்கின்றன' (கள்ளோ 24) என்று தம் அனுபவத்தை அருளப்பன் வாயிலாகச் சொல்லுகிறார்.

காதல் பற்றி அருளப்பன் வாயிலாக ஒரு புது விளக்கத்தைச் சங்ககாலத் தலைவர்களாகிய பாரி, பேகன் இவர் தம் செயலோடு ஒப்புப்படுத்திக் காட்டுவது புதிய கருத்தாகும். (கள்ளோ ப. 50)

> "இதுதான் உலகம். இங்கே பலருக்குக் கடமைப் பட்டு வாழ்கிறோம். பாரியும் பேகனும் கடமைகளை மறந்து சிலபொழுது வாழ்க்கையின் எல்லையைக் கண்டார்கள். அந்த முல்லைக் கொடியைக் கண்டதும் பாரி அதன் அசைவு தவிர எல்லாவற்றையும் மறந்தான். அந்த மயிலைக் கண்டதும் பேகன் அதன் நடுக்கம்—ஆடல்—தவிர மற்ற எல்லாவற்றையும் மறந்தான். இது ஒருவகை அறியாமைதான். இந்த அறியாமை தான் காதல். இது ஓர் அளவிற்காவது குறித்த எல்லைக் காவது வேண்டும். அவ்வாறே அமைவது அருமை தான்.

நான் அந்த நெறியை நோக்குகிறேன்" என்று அருளப்பனைப் பேசவைக்கிறார்.

சங்க கால இலக்கியங்களைக் காட்டுவது மட்டுமன்றி அதில் வரும் வழக்கங்களையும் ஒழுக்க நெறிகளையும்கூடச் சுட்டிச் செல்லும் மரபு இவருடையது. ஒன்றுமட்டும் இங்கே காட்டலாம் என நினைக்கிறேன். 'பாவையில்' பாவை—பழனியின் காதல் வாழ்வில் இரவுக்குறி, இரவுக் குறி இடையீடு இவைகளைப் பயிலின் நாம் சங்க இலக்கியத்துக்கே செல்வோம்.

"இப்படியே இருவரும் பேசிக்கொண்டிருந்து அமைதியானார்கள். வேலுப்பிள்ளை உறங்கிவிட்டார். மனைவி உறங்கவில்லை. இவர்கள் பேசும்போது பாவை உறங்காமல் கண்ணை மூடிக்கொண்டே எல்லாம் கேட்டுக்கொண்டிருந்தாள். சிறிது நேரம் அமைதியாக இருக்கவே, இருவரும் அயர்ந்து உறங்குவதாக எண்ணிக் கண்ணைத் திறந்து திறந்து பார்த்துக் கொண்டிருந்தாள்.

திடீரெனத் தோட்டத்தில் வேப்பமரத்தில் தூங்கும் காக்கைகள் கலைந்து 'கா கா' எனக் கரைந்தன. அது பாவையும் பழனியும் செய்த ஏற்பாடு. தான் வருவதைப் பாவைக்குத் தெரியப்படுத்த வேண்டி, பழனி அந்த மரத்தின் மேல் சிறுகல் எறிந்து காக்கைகளைக் கலைப்பது வழக்கம். இதைப் பாவை உணர்ந்து செல்வது உண்டு. அன்று இரவு பாவை அந்தக் காக்கையின் ஒலியைக கேட்டதும் தாய் உறங்குவதை அறிய முயன்றாள்.

'அம்மா, அம்மா' என்று மெல்லிய குரலில் அழைத்தாள். 'ஏன் அம்மா பாவை' என்றாள் தாய்.

பாவை மனம் உருகினாள். 'பழனி வந்து காத்திருந்து செல்வாரே! அம்மாவோ உறங்கவில்லையே'

என்று வருந்தினள். 'ஏன் அம்மா கூப்பிட்டாய்?' என்று மறுபடியும் தாய் கேட்டாள். 'ஏதோ கனவு கண்டு விழித்துக் கொண்டேன்' என்று பொய் சொன்னாள். 'இன்னும் சின்னக் குழந்தையாகவே இரு. வயது ஆகியும் பெரியவள் ஆகவில்லை' என்று சொல்லிக் கொண்டே அன்னை உறங்கிவிட்டார், ஆயினும் பாவை உறங்கவில்லை. அவளுடைய மனம் பழனியின் ஏமாற்றத்தை நினைத்து வாடியது. இது அவளுடைய கவலையைப் பெருக்கிய நாளாகும்." (பாவை.ப. 33-34)

என்று சங்க கால இலக்கியங்களில் வரும் இரவுக்குறி, இரவுக்குறி இடையீடு முதலியவற்றை விளக்கிக் காட்டியதோடு, இத்தகைய காதல் ஒழுக்கநெறி காலம் கடந்து இன்றும் என்றும் வாழும் என்ற உண்மையினையும் மு. வ. அவர்கள் உணர்த்தத் தவறவில்லை. இத்தகைய சங்க இலக்கியத்தைத் திறனாய்ந்து அவற்றை வாழ்வொடு பிணைக்கும் இடங்கள் இவர்தம் நாவல்களிலும் சிறுகதை முதலியவற்றிலும் பலப்பலவாகும். எனினும் அளவு கருதி இந்த அளவொடு இத்தலைப்பினை அறுதியிட்டு அடுத்து இவர் நாவல்களில் காட்டும் சமுதாயச் சீர்திருத்த வாழ்வு நெறி பற்றிய இவர்தம் கொள்கைகளை ஓரளவு தொட்டுக் காணலாம்.

## சீர்திருத்தங்கள்

இவர் வாழ்க்கையின் மூடநம்பிக்கைகளைச் சாடி வெறுக்காத நூலில்லை என்று சொல்லலாம். வாயிற்படிக்குக் குங்குமம் வைப்பது முதல் வீட்டுக்கொரு சமையல் இருப்பதுவரை அமைந்த வீட்டுச் சீர்திருத்தங்கள் இவர் பலவிடங்களில் சுட்டிக்காட்டி சீர்திருத்தங்கள் செய்ய வேண்டிய இன்றியமையா நிலையைச் சுட்டி விளக்குவார்.

"இந்த வாயிற்படியில் வீணுக்குச் செலவாகும் குங்குமம் முதல் அங்கே உலர்ந்து கொண்டிருக்கும் காஞ்சிபுரப் பட்டுப்புடைவை வரையில் எல்லாம்

அவளுக்குச் சுற்றுப்புறத்தார் தரும் மதிப்புக்காக இருப்பவை" (செந். பக். 36)

"அடுப்பங்கரைப் பூச்சியாய் உலகம் தெரியாமல் அறிவும் வளராமல் மங்கிக் கிடக்க வேண்டுமே என்றேதான் கவலையாக இருந்தது. வீட்டுக்கு ஒரு சமையல் அறை இருக்கும் உலகத்தில் வேறு வழி இல்லை. (செந். 50)

"நண்பன் குமரப்பன் எட்டாவது பிள்ளையாம்; எட்டிப் பார்த்த இடம் குட்டிச்சுவராய்ப் போய்விடுமாம். அவனுக்குப் பெண் கொடுப்பவர்கள் அஞ்சுகிறார்களாம். என்ன நம்பிக்கை! என்ன அறியாமை!" (செந். ப. 24)

"மூடநம்பிக்கைகளை வளர்த்து மக்களை ஏமாற்றுவதில் ஆங்கில வைத்தியன் தோற்றுவிடுகிறான். எவ்வளவோ புதுப்புதுப் பெயர்களை வைத்து நோய்களின் முகவரி எல்லாம் சொல்லி, அவற்றின் தாய்மார்களான பூச்சிகளுக்கெல்லாம் பெயர், வடிவம், தொழில், குணம் எல்லாம் கற்பித்து மருட்டிப் பார்த்தும் ஆங்கில வைத்தியன் ஏமாந்து போகிறான். பூசாரி வைத்தியனே மூடநம்பிக்கையை ஊட்டுவதில் கெட்டிக்காரன்." (செந். ப. 26)

"அடித்து வளரும் குழந்தைகள் நாளைக்கு அடங்காப் பிடாரிகளாகி விடும்." (கள்ளோ. பக். 58)

"நாட்டுப்புறக் குடும்பங்களை நாடினால் கள்ளங்கரவற்ற நல்ல பெண்கள் கிடைக்கலாம்... ஆனால் அவர்களுக்குக் கல்வியே இருக்காது. ...நகரங்களில் செல்வம் உள்ள குடும்பங்களில்தான் கற்ற பெண்கள் கிடைப்பார்கள். அவர்களிடத்தில் பெண்மைப் பண்பு அமைந்திருப்பதோ அருமை. நாகரிகத்தின் பெயரால் கண்மூடி வாழ்க்கையைக் கற்றிருப்பார்கள்."

(கள்ளோ. ப. 36)

"என் சுற்றத்தாருள் இரண்டு மனைவியும் ஒரு வைப்பும் ஒவ்வோர் ஆண்மகனுக்கும் தேவை என்ற கொள்கையே வாழ்கிறது". (கள்ளோ. ப. 48)

"காப்பி பரவாத மூலைமுடுக்கு உண்டா! புகையிலை பல வடிவம் தாங்கிப் பலவகைகளில் உதவுகிறதல்லவா! உலகத்தில் பெண்ணும் ஒரு கள்ளாக - ஒரு புகையிலைக் குடியாகப் பயன்படுகிறாள். எல்லாம் களிப்புக்குத்தான் - ஒருவகைத் தூண்டுதலான மயக்கத்துக்குத்தான்." (கள்ளோ. ப. 92)

"இனிப் பள்ளிக்கூடங்களிலும் குடும்பங்களிலும் படிப்பதற்கும் நடப்பதற்கும் தொடர்பு இல்லாமல் செய்ய வேண்டும். 'நிற்க அதற்குத் தக' என வற்புறுத்தக் கூடாது. உண்மை உள்ளம் படைத்தவர்களை ஆசிரியர்களாக ஏற்படுத்தக் கூடாது." (மண் குடிசை.ப. 50. இது படித்தும் நடக்காதவர் மேல் வந்த வெறுப்பால் கூறியது.)

"மனச்சான்று உடையவர்களுக்குத் தான் தொல்லை. அதை விற்று விட்டவர்ளுக்கு ஒரு கவலையும் இல்லை." (மண். ப. 76)

"குடும்பத்தைத் திருத்த முயலலாம். நாட்டைத் திருத்த முயலலாம். முயற்சி நம் கடமை. ரயில் ஓட்டுகிறவன் எஞ்சினை நன்றாகக் காப்பாற்றுகிறான். சீர்ப்படுத்துகிறான். ஆனால் தொழிலை விட்டுப் போகும்போது அதைப்பற்றி ஏங்கவில்லை. அதுபோல குடும்பத்திலும் நாட்டிலும் நம் கடமையைச் செய்வோம். வாழ்வு முடியும்போது கவலை இல்லாமல் விடை பெறுவோம்." (மண். 473)

"நீ மனைவி மக்களைத் திருத்த வேண்டாம் என்று சொல்லவில்லை. அதற்கான முயற்சி செய். தோல்வி

கண்டபோது அவர்களை வெறுக்காதே. உலகத்தில் ஒரு பகுதி அவர்கள்." (மண். ப. 472)

"இதுவும் சபமாலை உருட்டுவதுபோல் பிள்ளைத் தன்மையாக முடியக் கூடாதே." (மண். ப. 430)

"சுற்றுப்புறத்தில் உள்ளவர்கள் பட்டாடை உடுத்திப் பகட்டாகத் திரிகிறார்கள். அவளும் அப்படியே திரிய விரும்புகிறாள். நானோ நூலாடை அணிந்து உடுத்து அழகாக விளங்கலாம் என்கிறேன். அதற்காக வருந்துகிறாள். சுற்றுப்புறத்தில் உள்ளவர்கள் கழுத்தொடியக் கைந்நோகப் பொன் நகைகள் சுமந்து இறுமாக்கிறார்கள். தானும் அப்படியே இறுமாக்க விரும்புகிறாள். நானோ அழகைக் காக்க சில நகைகள் போதும் என்கிறேன். அதற்காகவே வருந்துகிறாள்." (பாவை. ப. 170-171)

"நம்முடைய குழந்தைகளுக்கு நன்மையான பொருளையே கடவுளுக்குப் படைக்கலாமே. மனம் தானே முக்கியம். சடங்கு எல்லாம் அப்புறந்தான்.
(பாவை. ப. 178)

"கொடிய விலங்குகள் என்ன செய்தாலும் எனக்கு நன்மையாகவே முடியும். அவைகளுக்கு என்னைக் கொல்லும் கருவிகள் இருக்கலாம். ஆனால் (மனிதரைப்போல்) என்னைக் கெடுக்கும் எண்ணம் இல்லை." (பாவை.ப. 113)

"உலகம் பெண்களுக்குக் கவலையை ஆக்கத் தெரிந்து கொண்டது. ஆனால் போக்கத் தெரிந்து கொள்ளவில்லை," (பாவை. ப. 165)

"பத்தாவது படித்துவிட்ட பிறகு இங்கும் அங்கும் திரிந்து சரக்கு வாங்குவதும் கணக்கு எழுதுவதும் அவமானம் என்று எண்ணுகிறார்கள் இந்தக் காலத்துப் பிள்ளைகள்." (மலர். ப. 16)

"புத்தருடைய சிலைக்குப் பக்கத்தில் பல்லி சொல்லியது. பெரியப்பா தம் சோபாவின்மேல் தம் சுட்டு விரலால் டக் டக் என்று தட்டினார்." (மலர். ப. 23)

"நேராகக் கைவீசிச் சென்றேன். குழந்தைகளும் பெரியோர்களும் தெய்வமும் உள்ள இடத்திற்கு வெறுங்கையோடு செல்லக்கூடாது என்ற பழமொழி நினைவுக்கு வந்து வந்து தூண்டியது. குழந்தைகளின் வயிறும் மடங்களும் கோயில்களும் கெட்டது போதும் என்று மற்றொரு புறம் நானே ஆறுதல் தேடிக் கொண்டேன்." (மலர். ப. 33)

"மிக நேர்மையாக இருப்பதால் லஞ்சம் வாங்கிகளுக்குப் பெரிய இடையூறு யிருக்கிறார். அதனால் அவர்கள் ஒன்று சேர்ந்து கோள் சொல்லி வேறு இடத்துக்கு மாற்றிவிட முயற்சி செய்வதாகக் கேள்வி. பணவேட்டை ஆடும் சமுதாயம் நல்லவர்களுக்குத் தானே தொல்லை செய்கிறது." (மலர். ப. 48)

"குடும்பம் குடும்பமாக, சமுதாயம் சமுதாயமாக உலகத்தையே கெடுத்து வருவது பண ஆசைதானே." (மலர். ப. 99)

"மனிதன் தன்னுடைய மனத்தில் உள்ள எண்ணத்தை யார் மேலாவது வைத்துச் சொல்லவேண்டும். அதனால் விநாயகர் கதையில் சேர்த்திருக்கிறான்." (மலர். ப. 126)

"கற்போடு ஆணும் பெண்ணும் வாழ்வது எளிது அல்ல. பல குழந்தைகளைப் பெறும் தாய் தன் கற்பைக் காத்துக்கொள்வது கையும் காலும் உடையவன் ஒற்றை மாட்டு வண்டி ஓட்டுவதுபோல. மலடாயிருப்பவள் கற்பொடு வாழ்வது கால் இல்லாத முடவன் ஒற்றை மாட்டு வண்டி ஓட்டுவதுபோலக் கொஞ்சம் அருமையே." (மலர். ப. 195)

"பெருங்காஞ்சி ஏரி முதலியவை கடலின் இயற்கைப் பெருமிதத்துக்குமுன் நிற்க முடியாதவை என்பதை உணர்ந்தேன் தவிர அங்குக் கண்ட மக்களின் கூட்டமும் என்னைக் கவர்ந்தது." (அகல். 119 – மு. வ. பெற்ற சென்னையின் முதல் அனுபவம்).

"நாம் உழைக்கவேண்டும். உழைப்புக்கு ஏற்ற கூலி வரவேண்டும். இப்படி எதிர்பார்ப்பதுதான் கடமை. அதை விட்டு எதிர்பாராமல் பணம் வந்து குவியவேண்டும் என்று ஏங்குவதே பாவம்." (அகல். பக். 217).

"ஐம்பது ரூபாய் வருவாய் உள்ளவர் ஐந்நூறு ரூபாய் வருவாய் உள்ளவரைப் பின்பற்ற முடியுமா? அவர் ஐயாயிரம் ரூபாய் வருவாய் உள்ளவரைப் பின்பற்ற முடியுமா?" (அகல். பக். 297).

"ஒருவன் பசிக்கு ஒரு சின்ன கோழி அல்லது அரைக்கால் ஆடு இருந்தால் போதும். ஆனால் ஒரு பட்டுச் சேலைக்கு ஆயிரக் கணக்கான பட்டுப் பூச்சிகளைக் கொதிக்கும் வெந்நீரிலிட்டு வதைத்துக் கொல்ல வேண்டும்." (அகல். பக். 310).

## கடமை எனக்கொண்டார்

இதுவரையில் டாக்டர் மு.வ. அவர்கள், தம் நாவல்கள் ஒரு சிலவற்றில் எடுத்துக் காட்டும் சில மக்களைப் பற்றிச் சுட்டிய சில கருத்துக்களைத் தொட்டுக் காட்டினேன். நான் காட்டிய நூல்களிலேயே இன்னும் இத்தகைய கருத்துக்கள் பலப்பல உள்ளன. காட்டாத நூல்களுள் இன்னும் பல. இக்கருத்துக்களுள் பல இவர்தம் வாழ்வோடு, ஊரோடு, உற்றாரோடு, வீட்டோடு, மனைமக்களோடு, மற்றவரோடு தொடர்பு உடையனவே. இவை அனைத்தும் இவர்கண்ட, கொண்ட வாழ்க்கை நெறியின் நிழலாடிகளே. புத்திலக்கியமாகிய நாவல்களைப் படைத்த அறிஞர் மு. வ. அவர்கள் நான் முதலில் காட்டியபடியே தம் சூழ

லுக்கேற்பவே அவற்றை அமைத்துக் கொண்டார். எச். ஜி. வெல்ஸ் என்ற பேராசிரியர் எழுதிய உருத்தெரியாத மனிதன் ( The Invisible Man ) என்பதை ஒட்டி இயற்றிய தம் மண்குடிசையில் மாய மனிதனைப் பற்றிப் பல பக்கங்கள் எழுதியபோதிலும் அவற்றுள்ளும் அவர் வீட்டிலும் நாட்டிலும் நடைபெறும் பல வழக்கங்களையும் கொடுமைகளையும் பிறவற்றையும் சுட்டிக் காட்டுவதையே தம் கருத்தாகக் கொள்கிறார். அந்த மண்குடிசையின் கடைசிப் பகுதியில் கடிதத்தில் கண்டபடி, இவர்தம் வீட்டையும் நண்பர்தம் வீடுகளையும் நாட்டுமக்கள் வீடுகளையும் திருத்த எழுத்தாலும் பேச்சாலும் செயலாலும் எவ்வளவோ முயன்றும் வெற்றி பெறவில்லை. இதை இவரே என்னிடமட்டுமின்றிப் பல நண்பர்களிடம் சொல்லியிருக்கிறார். இவருக்கு உற்ற சிலரும் இவர் பேச்சாலும் எழுத்தாலும் திருந்தா நிலையில், எங்கோ உள்ளவர்கள் இவர் நூலைப் படித்துத் திருந்தியதாக எழுதிய கடிதங்கள் சிலவற்றை என்னிடம் காட்டும்போது இவர் உணர்வு எல்லையற்றதாகும். இதையும் மண்குடிசையின் கடிதத்தில் தந்துள்ளார். இவரே அக்கடிதத்தில் சுட்டியபடி இவற்றையெல்லாம் தம் கடமையாகச் சொல்லியும் எழுதியும் செய்துவந்தார். ஆனாலும் வள்ளுவராலும் இயேசுவாலும் காந்தியாலும் புத்தராலும் பிற பேரறிஞர்களாலும் திருத்த முடியாத இந்தப் பெரிய உலகைத் தம்மால் திருத்த முடியும் என்ற நம்பிக்கை இல்லையாயினும், தாம் பிறந்ததன் கடமை இத்தகைய கருத்துக்களை மக்கள் உள்ளங்களில் பதியச் செய்யவேண்டும் என்ற உணர்வாலேயே - அதிலும் கதைகள் மூலம் செய்தல் பயன் விளையும் என்று நம்பியே இக்கருத்துக்களை வாரி இறைத்துள்ளார். இப்படியே இவர் சமுதாய வாழ்வு பற்றிக் கூறிய சில கருத்துக்களைக் காண்போம்.

## சமுதாயச் சீர்திருத்தம்

டாக்டர் மு. வ. அவர்கள் இலக்கியங்களைப் படைத்த நோக்கமே அவற்றின் வழியே சமுதாயத்தைத் திருத்த

வழி காண்பதாகும். எனவே இவற்றுள் தம் வாழ்வொடு பின்னிப் பிணைந்தவற்றையும் உலக நிகழ்ச்சிகளையும் கொண்டே சமுதாய வாழ்வின் சிக்கல்களையெல்லாம் காட்டுவதோடு, அவை களையப்பெறவேண்டிய இன்றி யமையா நிலையினையும் சுட்டியுள்ளார். இந்த வகையில் இவர் தொடாத பகுதி இல்லை எனலாம். நாட்டுச் சீர்திருத் தம், வீட்டுச் சீர்திருத்தம், கல்வி, அரசியல், வாழ்வியல், மொழியியல் இவைகளில் செய்யவேண்டிய சீர்திருத்தம் ஆகியவை பற்றியெல்லாம் விரிவாகக் காட்டுகிறார். பிறந்த தாய்நாட்டின் நிலையினையும் பயின்ற தாய்மொழியின் நிலை யினையும் எண்ணி எண்ணி எழுதுகிறார். தமிழர் நிலை இவர் உள்ளத்தைத் தொடுகிறது. இவை அனைத்தும் மாலையினைப் பின்னிப் பிணைக்கும் நூல்போல் அமைய, பாத்திரங்களின் இடையே இவர்தம் நாவல் இலக்கியங்கள்செல்லுகின்றன. நான் முன் காட்டியபடியே இவர்தம் நாவல்கள் அனைத் தையும் கொள்ளாது, ஒரு சிலவற்றில் உள்ள ஒரு சில கருத்துக்களை மட்டும் இங்கே சுட்டிக்காட்ட நினைக் கிறேன். (முற்றிலும் – எல்லா நூல்களிலிருந்தும் எடுத்துக் காட்டல் மிக விரிவுடையதாகி நிற்கும்.)

"ஒன்று இரக்கம், மற்றொன்று உண்மை. இந்த இரண்டு பண்பும் உடையவர்களைத் தாழ்ந்த குலத்தார் என்று நினைப்பது பாவம் அல்லவா." (செந். பக். 520).

"எழுந்து ஓட்டலுக்குச் சென்றேன். நூலைத் தொழிற் சாலையைவிட ஓட்டல் எந்த வகையிலும் குறைந்தல்ல. நூலைத் தொழிற்சாலையில் யந்திரங்களும் மனிதர்களும் கலந்து வாழ்கிறார்கள். இங்கும் அப்படித்தான். ஆட்க ளெல்லாம் யந்திரங்களாக மாறிவிட்டிருக்கிறார்கள். யந்தி ரங்கள் வருகின்றன. 'எல்லாம் சூடாயிருக்கிறது. என்ன வேண்டும்?' என்ற ஒரே மந்திரத்தை ஓதுகின்றன. பிறகு நேராகப் போகின்றன; நேராக வருகின்றன. மேசைப் பக் கத்தில் நின்றதும் கைகளை நீட்டுகின்றன. தட்டுகள் வெளியே வருகின்றன. அவற்றில் சிற்றுண்டி காண்கிறோம். ...போதும் போதும். மூன்று நாட்களில் சலித்துவிட்டேன்."

(செ. பக். 65-66-இது மருதப்பன் வாக்காக வருவதானுலும் மு. வ. அவர்கள் சென்னை வாழ்க்கை மேற்கொண்ட முதல் நாட்களில் பெற்ற அனுபவமேயாகும்.)

"வாழ்க்கையில் நல்ல அமைப்பு இல்லையானல் கெட்ட சூழலுக்கு அடிமையாவது யார் குற்றம்? அரசியல் அமைப்பின் குற்றமே ஒழிய சிலரின் குற்றமல்ல. இவ் உலகத்தின் குற்றமே தவிர, துன்பத்துக்கு உள்ளானவரின் குற்றமல்ல." (செந். பக். 81-82)

"பணத்தின் எல்லை சட்டம் செய்வதும் சாட்சி தேடுவதும்; காதலின் எல்லை சேர்ந்து வாழ்வதும் பிரிந்து சாவதும் தவிர வேறுண்டா?" (செந். ப. 144)

"மூட்டை சுமப்பது ஏழைகளின் தொழில் என்றும் அவர்களைச் சுமக்க வைப்பது பணக்காரர்களின் கடமை என்றும் உலகத்தில் ஏற்பட்டிருக்கிறது." (கள்ளோ. ப. 7)

"சமுதாயக் கட்டுப்பாடு உண்மையான காதலைக் கட்டுப்படுத்த முடியாது." (கள்ளோ, ப. 34)

"இந்தக் காலத்தில் அறிவும் ஆராய்ச்சியும் தொத்து நோய் போல் வீடுதோறும் பரவுகின்றன. அவை இருக்க வேண்டிய இடம் வேறே; செலுத்தவேண்டிய செங்கோல் வேறே. அவற்றிற்கு இவ்வாழ்க்கையில் இடம் கொடுக்கிருர்கள். அன்பைத் துரத்திவிட்டு அறிவை வாழவிடுகிருர்கள். அன்பு பிணைப்பது, அறிவு பிரிப்பது, பகுப்பது, பிரிப்பது; இதுதானே அறிவு? பகுத்தறிவு என்றுதானே பெயரும்." (கள்ளோ, பக். 89)

"நாட்டுப்புறத்துப் பசுக்களின் பால் எல்லாம் அந்தக் குழந்தைகளுக்கு உதவாமல் நகரங்களின் காப்பி விடுதிகளுக்கு உதவுகின்ற நிலை நினைவுக்கு வந்தது." (கள்ளோ, பக். 57)

"ஆயிரக்கணக்கான ரூபாய், மிகப்பல நகைகள், ஆடம்பரமான செலவுகள் எல்லாம் சமுதாயத்தில் சிலருக்கே." (கள்ளோ, பக். 65)

"தந்திரத்தால் ஏமாற்ற முயற்சி செய்யாதே. எப்பொழுதும் நேர்மையாகிய தற்காப்பு தேடிக்கொள். தந்திரத்தை நீ கையாண்டால் உன்னைவிட வல்லவர்களின் தந்திரத்துக்குப் பலியாகி விடுவாய்." (கள். பக். 174)

"தேர்தலில் நின்று பணம் தொலைவது நல்லதுதான். அதை எண்ணினால் தேர்தலும் வேண்டியதே. கெட்ட செல்வர்களின் செல்வாக்கை அழிப்பதற்கு அது உதவியாக இருக்கிறது." (மண். ப. 76)

"தனக்கு ஆகாதவர்கள், ஆகாதவர்களைச் சேர்ந்தவர்கள் இவர்களின் வழக்கு வந்தால் வேண்டுமென்றே கடுமையாகத் தண்டிக்கிறான். வேண்டியவர்கள் தப்பே செய்தாலும் அவர்களை விட்டுவிடுகிறான். அந்தப் பதவியில் இருப்பதால் போலீசாரின் துணை இருக்கிறது." (கௌரவ நீதிபதியின் கொடுமை பற்றி—மண், ப. 77)

"இன்றுள்ள சமுதாயம் மண்குடிசை போன்றது. அதில் எலிகள் வளைதோண்ட முடிகின்றது. பெருச்சாளிகள் கடைக்காலையே தோண்டுகின்றன. பலவகைப் பூச்சிகளும் குடிபுகுகின்றன. எல்லாம் சேர்ந்து குடிசையைப் பாழாக்க முடிகின்றது." (மண்.477, நூலின் பெயர்க்காரணம் புலப்படுகிறது.)

"சாவு என்பது வாழ்வுக்குத் தேவையானது. சாவும் வாழ்வும் சேர்ந்தால் வட்டம். இது இல்லையானால் அது இல்லை. இலை பழுத்து வாடி உதிர்ந்தால்தான், தளிர் பசுமையாகத் தோன்றுகின்றது. பழுப்பதும் தழைப்பதும் போலத்தான் சாவும் வாழ்வும்." (மண். 95. இது உண்மையாக உணர்ந்ததோடு, கடைசிக் காலத்திலும் சாவுக்கு இவர் கலங்காமலே இருந்தார்.)

"வழிபாட்டால் பயன் உண்டு. மனம் அமைதி பெறுகின்றது; வலிமை பெறுகின்றது. நானே உணர்ந்து கொண்டேன்." (மண். ப. 429—இவர் வழிபாடாற்றுபவர்).

"உறக்கம் வாராத நோயாளிகள் போகவில்லை. உறங்கத் தெரியாத செல்வர்கள் போகவில்லை. துணிகளை அடுக்கி வைத்திருக்கும் பேறு பெற்றவர்கள் போக வில்லை...பொன் நகைகளை உடம்பெல்லாம் அணிந்த வர்கள் போகவில்லை. உயர்ந்த சாதி என்று தங்களை எண்ணிக் கொள்ளுகிறவர்கள் போகவில்லை. உழைத்து வியர்வை விடும் மக்களோடு உழைப்பில்லாமல் உண்டு வாழும் பேறு பெற்றவர்கள் சேரலாமா?" (பாவை. ப. 18—குருவிக்காரர் நாட்டுப்புறப் பாடல்களுக்கும் ஆடலுக்கும் செல்லாத மக்களைப் பற்றிக் கூறி அவர்தம் செருக்கின் நிலையை விளக்குகிறார்.)

"நாட்டுப் புறங்களில் உண்மை பேசுவது ஒரு நல்ல பண்பாக விளங்கினாலும் நகரங்களில் மக்களைக் கெடுக் கும் பண்பு என்றால் அது ஒன்றுதானே. உள்ளொன்று வைத்து வெளியே அதனைக் காட்டாமல் வாழத் தெரியாத மக்கள் நகரங்களில் இடர்ப்படுவதும் அதனால்தானே." (பாவை 44, இதில் நகர வாழ்க்கையின் தன்மையை விளக்குகிறார்.)

"நாட்டுப்புறத்தில் கண்மூடி வாழ்வுக்கும் செல்வாக்கு உடையவர்களுக்கும் சாதி வழக்கங்களுக்கும்தான் இட முண்டு." (பாவை, ப. 137)

"அவரவர்களின் மனைவிமாரின் பட்டாசையையும் பொன்னாசையையும் ஆடம்பர மோகத்தையும் தீர்ப்ப தற்குத்தான் ஆண்கள் லஞ்சம் வாங்கி உலகத்தைக் கெடுக்கிறார்கள்." (மலர். ப. 88)

"அவன் தேடி வாழும் பெண் யாராக இருந்தாலும் எனக்கு மருமகளே. அவனுடைய வாழ்வுதான் எனக்குப் பெரிது. அதற்கு என்னால் இடைஞ்சல் இருக்கக்கூடாது." (பாவை. ப. 91)

"நீ சொல்வது கருநாடகப் பேச்சு. இப்போதுதான் பத்தாவதுக்கு மதிப்பில்லாமல் செய்து விட்டார்களே.

பி.ஏ., எம்.ஏ.க்கள் நம்மோடு போட்டி போட்டுக் கிளார்க் வேலைக்கு வரும்போது நமக்குக் கதி ஏது? ...பத்தாவது படித்தவர்களுக்கு வாழ்வு கிடைக்க வேண்டுமானல் இந்தப் பட்டதாரிக்குத் தடை ஏற்படுத்தினல்தான் முடியும்?" (மலர். ப. 40.) சர்வீஸ் கமிஷன் தேர்வுமுறை பற்றி அடிக்கடி குறை கூறுவர்—உண்மையும் அதுதான்).

"ஒன்று மாமன் மைத்துனன் பெரிய உத்தியோகத்திலிருந்து நமக்குச் சிபாரிசு செய்யவேண்டும். அல்லது அப்பன் பாட்டன் சேர்த்து வைத்ததில் ஒரு பங்கு லஞ்சமாவது கொடுக்க வேண்டும்." (மலர், ப. 44)

"பணவேட்டை ஆடும் சமுதாயம் நல்லவர்களுக்குத் தானே தொல்லை கொடுக்கிறது." (மலர், பக். 58)

"என்றும் உழைப்பாளிகளை நம்பி உழைப்பாளிகளைப் போல் எளிய வாழ்வு வாழவேண்டும். இல்லையானல் போகப் போகத் தொல்லைப்படுவார்கள்." (மலர், ப. 85)

"நாவல் படித்தால் காதல் தொடங்கும் என்று பலர் காண்கிருர்கள். டிக்கெட் வாங்கிவிட்டால் ரயிலில் இடம் கிடைப்பது போலத்தான் நாவலும் காதலும் என்று பலர் எண்ணி ஏமாறுகிருர்கள்." (மலர், ப. 108). அந்த நாளில் ரயிலில் இடம் கிடைப்பது எளிதாக இருந்தது.

"எழுந்ததும், தெருக்கதவைத் திறக்காமல் தோட்டத்துக் கதவைத் திறக்கக் கூடாதாம்...சாஸ்திரமாம்... தோட்டத்துக் கதவை முதலில் திறந்தால் வீட்டு லட்சுமி தோட்டத்து வழியாகப் போய்விடுவாளாம்." (மலர். ப. 112)

"மனைவிக்கு உரிமை கொடு. உரிமையால் தீமை நேர்ந்தாலும் கவலைப் படாதே. இரண்டு மூன்று குடும்பங்கள் உரிமையால் கெட்டாலும் தமிழ்நாடு சீர்ப்படும்." (மலர், ப. 128)

"அமெரிக்காவில் எத்தனை அங்குலம் ஆடை உடம்பில் குறைகிறதோ அவ்வளவுக்கு நடன மங்கையர்க்குப்

பணவருவாய் பெருகியது. அங்குலத்துக்கு இத்தனை ஆயிரம் என்று கணக்கெடுக்கலாம் போல் தெரிகிறது." (மலர். ப. 150)

"பெண்கள் எப்போதும் இரண்டுபேர் ஒத்து வாழ மாட்டார்களோ, மாமியாராக இருந்தாலும் பிடிக்கவில்லை; வெளியாராக இருந்தாலும் பிடிக்கவில்லை." (மலர். 173)

"கணவன் மனைவியொடு கைகோத்துத் தெருவில் போவதைக் காணப் பொறுக்காத நாடு இது. மகனும் மருமகளும் பகலில் பேசுவதைக் கேட்கப் பொறுக்காத மாமியார்கள் மலிந்த நாடு இது." (மலர். ப. 183)

"இங்கே வைத்தியத்துக்குப் பணம் இல்லை. இருந்தாலும் வேலைக்காரருக்குப் பணம் கொடுக்காவிட்டால் தரும ஆஸ்பத்திரியிலும் ஒன்றும் நடக்காது. பணம் இல்லாவிட்டால் வேளைக்கு மருந்தும் கொடுக்க மாட்டார்கள். தரவேண்டிய கஞ்சியிலும் ரொட்டியிலும் பாதி எடுத்துக் கொண்டுதான் கொடுப்பார்கள்." (மலர். 186. பலரைக் காண ஆஸ்பத்திரிக்குச் செல்லும்போது அடிக்கடி சொல்லுவார்கள்).

"மற்றப் பெண்களின் மேல் நாட்டமுள்ள கற்பு இல்லாத ஆண்கள் என்றைக்குப் பார்த்தாலும் பூவும் கையுமாகத்தான் வீட்டுக்குள் நுழைவார்கள்." (மலர், ப. 205)

"ஒன்று நான் குடும்பம் நடத்தும் ஊரில் பொன்னும் பட்டும் இல்லாதபடி அரசாங்கத்தார் சட்டம் செய்ய வேண்டும். அல்லது, எந்தக் குடும்பத்தாரும் நூறு, நூற்றைம்பதுக்கு மேல் குடும்பத்திற்காகச் செலவு செய்ய முடியாதபடி அரசாங்கம் பார்த்துக் கொள்ள வேண்டும்." (மலர். ப. 231)

"அது என்ன வழக்கம் சாதியில் இல்லாத வழக்கம். குலத்தில் இல்லாத வழக்கம். எட்டு பேர் நலுங்கு வைப்பது பற்றி நான் இப்போதுதான் கேள்விப்பட்டேன். வேண்டுமென்றே செய்வதாகத் தெரிகிறதே. முன்னே

பின்னே வாழ்ந்த வீடாக இருந்தால் தெரியும்." (அகல். ப. 205)

"சினிமா நாடகங்களில் அழகும் அலங்காரமும் இருப்பதால் அந்தப் பசி மறைமுகமாகத் தூண்டிவிடப்படுகிறது. சமுதாயத்திலோ பார்த்தும் பேசியும் பழகுவதற்கு வாய்ப்பு இல்லை. இயற்கையாக உணர்ச்சிகளை அடக்குவதில் சிலர் மட்டும் வெற்றி பெறுகிறார்கள். பலர் கெட்டுப் போகிறார்கள்." (அகல். ப. 40)

"சில இளைஞர்கள் காலை மாலை இரண்டு வேளையும் பூசை, கோயில் வழிபாடு எல்லாம் ஓயாமல் செய்து, கடவுளிடம் நிறையப் பயன் எதிர்பார்த்து எதிர்பார்த்து கடைசியில் பயன் கிடைக்காமல் ஏமாந்து, திடீரென்று ஒருநாள் நாத்திகர் ஆகிவிடுகிறார்கள்." (அகல், ப. 47)

"விளையாட்டாக இருந்தாலும் விதிகளுக்குக் கட்டுப்பட வேண்டும் தெரியுமா? நீயே அரசர் என்று எண்ணிக் கொண்டு, உன் விருப்பம் போல் ஆட முடியாது. தெரிந்து கொள்." (அகல். ப. 416)

இவைபோன்று நான் காட்டிய இந்த நாவல்களிலேயே இன்னும் எத்தனையோ கருத்துக்களை இவர் அள்ளித் தெளித்திருக்கிறார். பிற நாவல்களிலும் சிறு கதைகளிலும் எண்ணற்றவை உள்ளன. அவை யாவற்றையும் படிப்பவர் நன்கு அறிவர். இங்கே காட்டப்பெற்ற சில கருத்துக்களை இவர் அடிக்கடி தம் நண்பர்களிடமும் மாணவர்களிடமும் சொல்லிக் கொண்டிருப்பார். இத்துணைக் கருத்துக்களையும் இவர் வாழ்விடைச் செயல்படுத்த முனைந்தார் என்றாலும் எல்லாவற்றிலும் இவர் வெற்றி பெற்றார் என்று சொல்ல முடியாது. சிலவற்றில் இவரும் சூழல்களுக்கும் குடும்ப நிலைக்கும் ஏற்ப விட்டுக் கொடுக்க வேண்டிய இடங்கள் இருந்திருக்கின்றன. ஆயினும் அவற்றையெல்லாம் தம் மனம் இன்றியே இன்றியே செய்ததாகவும் இசைவு தந்ததாகவும் கூறி வருத்தப்பட்ட

காலங்களும் உண்டு. அதனுலேயே மேலே நாம் கண்டபடி, இவற்றைக் கடமை என்று செய்யவேண்டும் எனவும் அதில் வெற்றி பெறுவது முக்கியமல்ல எனவும் இவரே கூறியுள்ளார் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். சிறப்பாகச் சாதிச் சடங்குகள், அரசாங்க உத்தியோகத் தேர்வுமுறை, மருந்தகத்தின் நிலை, நாட்டுப்புற நகர்ப்புற வேறுபாடு, இரண்டிடங்களிலும் உள்ள நலக்கேடுகள் ஆசியவை பற்றி அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பார். ஆம்! அவற்றில் பொதுமைக் கருத்துக்களும் திரு. வி. கவின் உள்ள உணர்வும் நிழலாடும் என்பதை அறிவார் உணர்வர்.

## தமிழ்ச் சமுதாய நிலை

பொதுவாகச் சமுதாயத்தின் நலக் கேடுகளையும் அவல நிலையினையும் சீர்திருத்தங்களையும் டாக்டர் மு. வ. அவர்கள் சுட்டிக் காட்டியதோடு தமிழ்ச் சமுதாயத்தின் நிலை, தன்மை, மொழிப்பற்று அற்ற தன்மை, காட்டிக் கொடுக்கும் நிலை முதலியவற்றையும் சுட்டிக் காட்டத் தவறவில்லை. இந்திய நாட்டின் பிற பகுதிகளுக்கெல்லாம் சென்று கண்ட நிலைகளுடன் தமிழக நிலையினை ஒப்பிட்டு அங்கங்கே அவர் சுட்டிய கருத்துக்கள் எண்ணத் தக்கன. வடநாட்டு யாத்திரையிலும் மாநாடுகளில் பங்குகொள்ளச் சென்ற காலங்களிலும் பிற நேரங்களிலும் என் போன்ற உடன் சென்றவரிடம் இவர் அவ்வப்போது வருந்திக் கூறிய எண்ணற்ற கருத்துக்கள் என்முன் நிழலாடுகின்றன. அவ்வாறு நாட்டுப்பற்றின் அவசியம் பற்றியும் நாட்டைக் கண் போன்று காக்க வேண்டும் என்பது பற்றியும் தன் நூல்களில் விளக்கியுள்ளார். எனினும் மேலே கண்ட நூல்களிலும் வேறு பிறவற்றிலும் இவை பற்றி இவர் சுட்டிய ஒரு சிலவற்றைக் காண்போம்.

> "தமிழர்களுக்கு இனப்பற்று இல்லை; மொழிப் பற்றும் இல்லை. அதனுல்தான் அவர்கள் இருக்க இருக்கக் கீழே போகிருர்கள்." (கள்ளோ. ப. 156)

"தமிழர்கள் ஒரு பற்றும் இல்லாதவர்கள். தங்களைப் பற்றி அவர்களுக்குக் கவலேயே இல்லை. இந்தியாவின் பழைய நாகரிகம் அவர்களுடையதுதான். ஆனால் இப்போது இந்தியாவில் ஏழைகள் அவர்கள் தான். நல்ல எண்ணம் இருக்கிறது. ஆனால் சொந்தக் கடமையை மறந்து விடுகிறார்கள் அதனால்தான் தாழ்ந்துவிட்டார்கள்." (கள்ளோ. ப. 165)

"வெளிநாட்டு உடைக்கும் வெளிநாட்டுப் பேச்சுக்கும் தமிழ்நாட்டில் மதிப்பு மிகுதி." (கள்ளோ. ப. 168)

"வெறும் தமிழரைப் போல் உணர்ச்சியை முன்னே கொட்டிவிட்டுக் காரியத்தைக் கெடுத்துக் கொள்ளும் ஆள் அல்ல அந்த அம்மா" (மலர். ப. 81)
இந்தி மொழியும் திராவிட மொழிகளுள் ஒன்று என்பது இவர் எண்ணம். அதற்குரிய ஆதாரங்களும் பல காட்டுவர். எனவே இவர்இந் நாவலில் இது பற்றியும் குறிப்பிடுகின்றார்.

"இந்தி மொழியும் இப்படித்தான். அதுவும் தமிழ்ப்பெண்தான். திராவிடப் பேச்சு மொழிகளுள் ஒன்றுதான். ஆனால் வேறே உடை அணிந்து கொண்டு உங்களிடம் வாழ்கிறது. சமஸ்கிருதம், அரபி முதலானவற்றில் சொற்களைப் பெற்று வேறு மொழி போல் வாழ்கின்றது. நீங்கள் அதை ஐரோப்பிய மொழிகளோடு சேர்த்து எண்ணுகிறீர்கள். உண்மை தெரிந்து கொள்வதற்கு ஒரு காலம் வரும்"

என்று மொழி மாநாட்டிற்குக் கலந்துகொள்ளச் சென்ற பெராசிரியர் அருளப்பன் வாயிலாக இந்த உண்மையைச் சொல்லுகிறார். இவரே அலிகாரில் நடந்த அனைத்திந்திய மொழி மாநாட்டில் இக்கருத்தினைப் பல வடநாட்டுப் பேராசிரியர்களிடம் வலியுறுத்திப் பேசிய நிலையினை அம் மாநாட்டிற் கலந்து கொள்ளச் சென்ற நானும் கேட்டுள்ளேன். இதன் வழியே இவர் இந்திய மொழிகள்

அனைத்துமே ஓரினத்தைச் சார்ந்தவை யெனும் கொள்கையை வற்புறுத்தியதோடு வேற்று நாகரிகங்களும் மொழிகளும் கலந்தமையே 'குமரியொடு வடவிமயத் தொருமொழி வைத்துலகாண்ட' நிலையை மாற்றிற்று என்பதை நன்கு வலியுறுத்துகின்றார். இவர்தம் மொழியியற் கட்டுரைகளும் மொழி பற்றிய ஆராய்ச்சிகளும் இக்கூற்றுக்கு அரண் செய்வனவாக உள்ளன. வாயப்புளதேல் நாளை அவை பற்றிக் காணலாம்.

தமிழ்ப்பாட்டினைப் பற்றி இவர் கூறுவது;

"தமிழில் பாட்டு வளமான செல்வம். புசிப்பதற்குச் சேர வாரும் செகத்தீரே என்று கூவி அழைக்கலாம் போல் இருக்கிறது. இரண்டாயிரம் ஆண்டுகளாக வாழும் வளமான பாட்டும் தமிழில் உண்டு. இன்று பிறந்த அழகான பாட்டும் உண்டு. பாட்டு இல்லாமல் இருந்த காலமே தமிழ்நாட்டு வரலாற்றில் காணோம். இரண்டாயிரம் ஆண்டுகளான பாட்டு என்றால் என்ன? வெறும் பேச்சா? நூறு தலைமுறைகளாக வந்த அறிஞர்கள் அத்தனை பேரும் திரும்பத் திருப்பச் சுவைபார்த்து, நல்ல சரக்கு நல்ல சரக்கு என்று நற்சான்று கொடுத்த பாட்டு அல்லவா!" (மலர். ப. 120)

இதில் இவர் பழமையைப் போற்றுவதோடு புதுமைக்கும் பெருமை தரும் சிறப்பு நமக்கு விளங்குகிறதன்றோ? தமிழ்ப் பேராசிரியர் சிலர் போன்று இக்காலப் பாட்டுக்கள் அனைத்தையும் இவர் வெறுக்கவில்லை. நல்ல வளமான பாட்டுக்கள் எக்காலத்தனவாயினும் ஏற்றம் பெறத்தக்கவையே என எண்ணிப் பலவிடங்களில் போற்றிப் பாராட்டியிருக்கிறார்.

வடநாட்டார் ஒருவர் சொன்னதாகத் தமிழர்தம் மொழிப்பற்றை இவர் சாடும் நிலையினையும் எண்ணிப் பார்க்கவேண்டும்.

"உங்கள் நாட்டில் சிதம்பரம் பிள்ளை, பாரதியார் போன்ற பெரிய பெரிய தேசபக்தர்கள் பிறந்திருக்கிருர்கள். ஆனுலும் ஆங்கில மோகம் இப்படி இருக்கிறதே. உங்களுக்குள் ஒருவரை ஒருவர் 'சார்' என்று ஆங்கிலத்தில் அழைக்கிறீர்களே. நம்முடைய தாயை 'டியர் மதர்' என்று அழைத்தால் நன்ருயிருக்குமா? நாங்கள் எங்களை மறந்திருக்கும் போதும் 'சார், என்று சொல்ல மாட்டோம். எங்கள் தாய்மொழியில் 'ஜி' என்றுதான் சொல்வோம். எங்கள் நாட்டுக்கு வந்து பாருங்கள். பள்ளிக்கூடம், கடைத்தெரு, ஆபீஸ், விளையாடுமிடம், உணவுக்கடை எங்கே வேண்டுமானுலும் வந்து பாருங்கள். எங்கள் நாட்டார் 'ஜி' 'ஜி' என்றுதான் ஒருவரை ஒருவர் அழைப்பார்கள். இங்கே கிராமங்களில் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளையே இப்படிக் கெடுக்கிறீர்களே?" (அகல். ப. 352)

என்று சொல்லி வருத்தப்பட்டதாகக் கூறி, தன் உள்ளக் குமுறலையும் வருத்தத்தையும் வெளிகாட்டி இனியாவது தமிழர் திருந்துவார்களா என எண்ணி ஏங்குகிருர் மு. வ.

தமிழ்நாட்டில் தமிழே பயிற்றுமொழியாக இருக்க வேண்டும் என்பதே இவர் விருப்பம். இதைப் பல மேடைகளில் சொல்லியும் எழுத்தில் வடித்தும் வந்துள்ளார். வாய்ப்புள்ளபோது அரசியலில் மேல் மட்டத்திலே உள்ளவர்களிடமும் வற்புறுத்தியும் வந்துள்ளார். தமிழ், தமிழ் மொழி, தமிழே பயிற்றுமொழி என்று மேடையில் விண்ணதிர முழங்கும் சில பெரியவர்கள்கூடத் தத்தம் பிள்ளைகளை ஆங்கிலப் பயிற்றுமொழி வகுப்பில் சேர்க்க முயல்வதைக் கண்டு கண்ணீர் வடித்துள்ளார். பச்சையப்பர் கல்லூரியில் அத்தகைய பெரியவர்தம் கடிதங்களைக் காணும்போது வருந்துவார். தற்போதுள்ள இன்றைய கல்லூரி முதல்வர் அவர்களும் அத்தகைய கடிதங்களை என்னிடம் காட்டித் தலைவர்கள்தம் போக்கை எள்ளி நகையாடுவதுண்டு. பயிற்றுமொழி பற்றி மு. வ. கூறுவதைக் கேளுங்கள்:

"தாய்மொழியில் கற்றிருந்தால் இவ்வளவு காலத்தையும் திரும்பத் திரும்ப உதவாப் பாடங்களுக்குச் செலவாக்கியிருக்க வேண்டியதில்லே. கீழ் வகுப்புகளில் தமிழில் படித்திருந்த பாடல்களேயே மேல் வகுப்பில் ஆங்கிலத்தில் படித்து அல்லல்பட்டிருக்க வேண்டியதில்லே. கல்வியும் பயன்பட்டிருக்கும். கற்றமுறையும் திருந்தியிருக்கும்." (கள்ளோ, ப. 38) என்றும் "நாம் இப்பொழுதென்ன நேர் வழியிலா படிக்கிறோம். நமக்கு ஆசிரியர்கள் நேர்வழியிலா கற்றுக் கொடுக்கிருர்கள். ஆங்கில நாட்டுப் பல்கலேக் கழகங்களில் ஆங்கில மாணவர்களுக்கு ஆங்கிலத்தின் வாயிலாகவே விஞ்ஞானம் வரலாறு முதலிய பாடங்களேக் கற்பிக்கிருர்கள். அதை அப்படியே இங்கே கண் மூடிப் பின்பற்றுகிருர்கள். நம் மூளேக்கு நேர்வழி தமிழ். அதை விட்டு ஆசிரியர்கள் ஆங்கிலத்தில் தானே கற்றுக் கொடுக்கிருர்கள். இப்படிக் கற்பிக்கும் வழி தவருக இருக்கும்போது, நாம் கற்கும் வழித் தவருகத் தான் இருக்கும்" (அகல். ப. 130-31)

என்றும் கூறி நாட்டுத் தற்காலத்திய பயிற்று மொழித் திட்டம் எவ்வளவு தவருனது எனச் சுட்டிக்காட்டுகிருர். இப்படியே தம் நூல்களில் பலவிடங்களில் இந்தக் குறை பாட்டினேச் சுட்டிக் காட்டித் திருத்த வழி உண்டா என எண்ணி எண்ணி ஏங்குகிருர் மு. வ. அரசாங்கம் வழி செய்த போதும் மக்கள் மனம் திரும்பவில்லேயே என வருந்தும் வழக்கமும் உண்டு. இன்றைய அரசாங்கத்தார் இடைநிலே இரண்டாண்டுகளில் தமிழ் பயில்வாருக்குச் சம்பளச் சலுகை அளித்துள்ளமை ஒருவாறு மு. வ. எண்ணத்தை நிறைவேற்ற வகை செய்யலாம். பாடம் சொல்லிக் கொடுப்பவரும் அவர்களேச் சொல்லிக் கொடுக்க வழி காட்டுபவரும் உளநிறைவோடு செயலாற்றிஞல் என்ருே தமிழ் நல்ல வகையில் பயிற்றுமொழியாக வந்திருக்கும் என்பது இவர் உள்ளக்கிடக்கை. இன்றும் சில ஆசிரியர்களும் பத்திரிகாசிரியர்களும் வேறு சில

தலைவர்களும்தாமே இதைத் தடுக்கவும் நினைக்கின்றனர். 'ஸ்ரீ'யைத் 'திரு' வாக்கினல் எந்த் மொழியில் இருந்தால் என்ன என்று கடிதம் எழுதுகிற இவர்கள், 'பார்லி மெண்'டை 'லேக்சபா' என அழைப்பதில் மகிழ்ச்சி காணும் நிலையினை எண்ணி எண்ணி மு. வ. நைந்துள்ளார்.

இவ்வாறு மு. வ. அவர்கள் தாய்மொழியிடத்தும் தாய் நாட்டிடத்தும் கொண்டுள்ள பற்றும் பாசமுமே இவர்தம் இலக்கியங்களில் அவற்றை இடம்பெறச் செய்து, என் றென்றும் வாழும் தமிழ்ச் சமுதாயத்துக்கும் பாரதப் பெரு நிலத்துக்கும் எச்சரிக்கை செய்து கொண்டிருக்கின்றன. இந்த நூல்களை இவர் எழுதி முப்பது ஆண்டுகள் கழிந்த பிறகும் இன்றும் நாட்டு நிலையும் மொழி அமைப்பும் பிறவும் மாருத நிலையினை நாம் எண்ணின் வருந்த வேண்டிய நிலையில் உள்ளோம்.

வாழும் சமுதாயத்து அடிப்படையான—சமுதாயத்தை வாழ வைப்பதான—இவர் எழுதிய பல நாவல்களையும் சிறு கதைகளையும் பலநாள் எண்ணிஎண்ணியே எழுதியுள்ளார் என்பதை நானறிவேன். நான் முன்னே கூறியபடி இவருக்கு ஒவ்வொரு துறையிலும் வழிகாட்டிகளாகப் பல பெரியோர்களின் எழுத்துக்களைப் பலமுறை பயின்றே அவரவர்தம் அடிச்சுவட்டினை ஒட்டி இத்தகைய இலக்கி யங்களை யாத்துள்ளார். எச். ஜி. வெல்ஸ், பெர்ஞட்ஷா போன்றவர் நூல்களும் சிலவற்றை இவர் பலமுறை படித் ததை நானறிவேன். அப்படியே காண்டேகர் நாவல்களுள் பலவற்றையும் நாவல் இலக்கியம் பற்றிய மேலைநாட்டு ஆய்வாளர்தம் நூல்களுள் பலவற்றையும் ஒன்றுக்கு மேலாகப் பலமுறை படித்துள்ளார் இவர்.

## இயற்கையுடன்

இத்தகைய படைப்பிலக்கியங்களுள் டாக்டர் மு. வ. அவர்கள் மேலே காட்டிய இலக்கிய—சமுதாய உணர்வு களோடு மட்டுமன்றி, இயற்கையோடும் எப்படி உறவாடி

ஞர் என்று காட்டி இந்தப் பகுதியை முடிக்கலாம் என எண்ணுகிறேன். நான் முன்னரே சில இடங்களில் இவர்தம் ஊர், வீடு இவற்றின் சுற்றுச் சார்புகளையும் அவற்றின் இயற்கையெழிலையும் அவற்றில் வாழும் பறவை முதலியவற்றையும் பற்றிச் சுட்டியதைக் குறித்துக் காட்டியுள்ளேன். எனினும் இங்கே அவற்றுள் சிலவற்றைத் தொகுத்துக் காட்டி, அவற்றில் இவர் எப்படித் தம்மைப் பறிகொடுத்து நின்றார் என்பதையும் அவற்றின் வழி உலகுக்கு எப்படி எப்படி நீதி புகட்டி நிலைத்த இலக்கியங்களை வாழ வைத்தார் என்பதையும் காணல் நலமாகும்.

முதல் நாவலாகிய செந்தாமரையின் தொடக்கத்திலேயே இவர் கிளிகளையும் முருங்கை மரத்தையும் படித்தவர்க்கு முன்னிறுத்திப் பின் கதையைத் தொடங்கியதறிந்தோம். அப்படியே முருங்கையும் தென்னையும் உவமையாக்கப்பட்டதையும் அறிந்தோம். இவருக்குப் பிடித்தமான இடம் பெங்களூர். அதிலும் அங்கே உள்ள பெரிய பூங்கா இவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டதாகும். அவற்றின் ஈடுபாடே இவர் பெங்களூரில் சொந்தமாக ஓர் இடத்தை வாங்கச் செய்தது. பல்கலைக் கழகத் துணை வேந்தர் நிலையிலிருந்து ஓய்வு பெற்றபின் இவர் பெங்களூரில் சென்று தங்கிக் கடந்த பதினைந்து ஆண்டுகளில் எழுதாக எண்ணக் குவியல்களையெல்லாம் எழுதி வெளியிட்டு மக்களுக்கு வழங்க வேண்டும் என எண்ணினார். ஆனால் அதற்கு நாம் கொடுத்து வைக்கவில்லை. தற்போது அந்த வீடுகளும் விற்கப் பெற்றுவிட்டன. மு.வ. அவர்கள் பெங்களூர் லால்பாக்கினைப் பற்றித் தம் கள்ளோ? காவியமோ? என்ற நூலில் ஆறு பக்கங்கள் (61-66) எழுதி விளக்கியதோடு, அதனோடு வாழ்வையும் அங்காங்கே தொடர்பு படுத்திக் காட்டிய திறனும் வியக்கத்தக்கதாகும்.

"அந்தச் (சிறு) செடிகளையும் கண்டு அவற்றை அடுத்து மிகமிக உயரமாக வளர்ந்திருந்த மரங்களையும் கண்டேன். என்னைப் போன்ற (மங்கை) ஏழைப்

பெண்கள் எங்கே, அருளப்பர் போன்ற பெருமக்கள் எங்கே என்ற எண்ணம் வந்தது" (கள்ளோ. ப. 65) என்றும்,

"சிலருடைய மனம் பனைமரம் போன்றது. தன்னை நினைத்துக் கொண்டே நெடுக வளர்வது. சிலருடைய மனம் அறுகம்புல் போன்றது. எங்கெங்குப் பார்த்தாலும் படர்வது" (மலர். ப. 123) என்றும்,

மரம் செடிகளோடு வாழ்வின் வேறுபாட்டுணர்வுகளைப் புகுத்தி நம்மை மறக்க வைக்கிறார்.

'அந்த வேப்ப மரத்தடியில் நின்றோம்' (கள்ளோ. ப. 83) என்று அருளப்பர் ஆசிரியரை நாடி மன அமைதி பெற வந்த நிலை, இராயப்பேட்டை முனிவராகிய திரு. வி. க. வை நாடி மு. வ., நான் உட்படப் பலர் மன அமைதி பெற அறிவுரை கேட்க, அவர் வீட்டு வேப்ப மரத்தடியில் உட்காரும் நிலையை அறிந்தவருக்கு நினைவூட்டும் என்பது உறுதி. இவ்வாறே இவர் வீட்டைச் சுற்றியிருந்த தென்னை முருங்கை மரங்களும் அவற்றின்மீது சுற்றிச் சுற்றி வரும் குருவிகளும் கிளிகளும் சுட்டப் பெறுவதை முன்னரே கண்டோம். இத்தகைய இயற்கைச் சூழலில் இவர் தம்மை மறந்த நிலையினைப் பலமுறை நான் நேரில் கண்டிருக்கிறேன். இலங்கைப் பயணத்திலும் காஷ்மீர்ப் பயணத்திலும் குன்னூரிலும் உதகையிலும் பெங்களூரிலும் அமைந்த இயற்கை உலகில் இவர் எப்படி எப்படித் தோய்ந்தார் என்பதை இன்றும் என்னால் எண்ண முடிகின்றது.

இவருடைய 'சங்க இலக்கியத்தில் இயற்கை' என்பது ஆய்வுக்காக எழுதப்பெற்ற பெருநூல். இதில் இவருடைய இயற்கையைக் காணும் கண்களும் காட்டும் உணர்ச்சியும் நன்கு புலப்படும். பயில்வார் எண்ணிப் பார்ப்பார்களாக

இதுவரை இவருடைய நாவல்கள் சிலவற்றிலிருந்து சில வாழ்வின் தேவை பற்றிய கருத்துக்களை காட்டினேன்.

இவர் எழுதிய பிற நாவல்களாகிய அல்லி, பெற்றமனம், கரித்துண்டு, அந்தநாள், கயமை, நெஞ்சில் ஒரு முள், வாடா மலர் போன்றவற்றிலும் இத்தகைய வாழ்விலக்கியக் கருத்துக்கள் பலப்பல உள்ளன. அப்படியே இவருடைய சிறுகதைத் தொகுப்புகளாகிய 'விடுதலையா', 'குறட்டை ஒலி' என்ற இரண்டிலும் இவர் கண்ட, அனுபவித்த செய்திகளே முக்கியமாக இடம் பெற்றுள்ளன. இவற்றுள் 'விடுதலையா' என்ற நூலில் வரும் பல கட்டுரைகள் அன்று நான் வெளியிட்ட 'தமிழ்க்கலை' என்ற திங்கள் இதழில் தொடர்ந்து வெளிவந்தவையாகும். இவ்வாறே அவர்கள் எழுதிய கி.பி. 2000, பழியும் பாவமும் என்பன மக்கள் உள்ளத்தில் எதிர்காலத்தைப் பற்றிய எண்ண அலைகளைத் தோற்றுவித்து வருங்காலம் எப்படி இருக்கும் என எண்ணச் செய்வனவாகும்.

'பழியும் பாவமும்' என்பது கள்ளால் விளையும் தீமையினை, ஏழைக் குடும்பங்களின் சூழ்நிலையில் விளக்கி, என்னென்ன வகைகளில் அவர்களைக் கெட்டொழிக்கின்றது என்பதை நன்கு சித்திரிக்கிறது. எனவேதான், 'உண்ணற்க கள்ளை' என்ற வள்ளுவர் வாக்கை முதலாக வைத்து முன்னுரையைத் தொடங்கி நூலுள் நுழைகிறார்.

## சிறுகதையும் நாடகமும்

இவர் எழுதியுள்ள நாடகங்களும் வாழ்வியல் அடிப்படையில் அமைந்தனவேயாம். இவற்றுட் சில சிலவிடங்களில் நடிக்கப் பெற்றும் உள்ளன. நாடக அமைப்பின் திறன் அறிந்து அவற்றை இவர் ஆக்கியிருக்கிறார் என்பது எண்ணத் தக்கது. பர்னட்ஷாவின் நாடகங்கள் பலவற்றைப் பயின்ற இவருக்கு அவைபோன்ற நாடகங்கள் இன்னும் பல எழுத வேண்டும் என்ற ஆசை இருந்தது. ஒருவேளை இன்னும் சில ஆண்டுகள் இருந்திருப்பாராயின் இம்மதுரையை நிலைக்களனாகக் கொண்ட ஓரிரு நாடகங்களும் நாவல்களும் நிச்சயம் உருவாகி உலகில் நடமாடிக் கொண்டிருக்கும். ஆனால் அந்த வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது.

இவர்தம் சிறுகதைத் தொகுப்புகளும் குறுநாவல்களும் நாடகங்களும் இவருடைய நாவல்கள் பெற்ற இடத்தை மக்கள் உள்ளத்தில் பெற முடியவில்லை. மக்களால் அதிக மாகப் போற்றப் பெற்ற இவர்தம் நூல்கள் நாவல்களே அடுத்து மொழி பற்றியும் இலக்கியம் பற்றியும் அமைந்த நூல்கள் அறிஞர்களால் நன்கு போற்றப் பெற்றன. 'தம்பிக்கு' 'தங்கைக்கு' போன்ற கடித இலக்கியங்கள் இளைஞர் உள்ளங்களைப் பற்றின. எனினும் நாடகங்களும் சிறுகதைகளும் அவ்வளவாகப் போற்றப் பெறவில்லை என்பது கண்கூடு. எனினும் 'விடுதலையா' என்ற சிறு கதையில் இவர்தம் இளமை வாழ்வையே சித்திரித்துக் காட்டுகிருர்.

'விடுதலையா' என்ற நூலின் முதல் கதை இது. இக் கதையும் வேறு சில கதைகளும் சேர்ந்த தொகுதியே இச் சிறு நூல். இந்த 'விடுதலையா' என்ற கதையில் தம் இயற் பெயர் திருவேங்கடம் என்பதையும், தாய் அம்மாக் கண்ணு என்பதையும் தம்மை உயிர்கொடுத்து வளர்த்த பாட்டி நரசம்மா என்பதையும் சுட்டிக் காட்டியுள்ளார். இவருக்கு 'நாயக்கன் பட்டியான்' என்ற பெயர்கொடுத்த அந்த இளமை நிகழ்ச்சி உண்மையே என்பதை இவர் கூறியுள்ளார். எனினும் கதைப்போக்குக்கு 'இது ஒரு கதை. இந்தக் கதையை என்மேல் ஏற்றிச் சொல்லு வார்கள் என்னுடைய பாட்டியாரும் அன்னையாரும்' (வீடு. ப. 25) என்று இவர் மேல் போக்காக குறித்துள்ளார். ஆயினும் பத்தாம் வகுப்பின் நிகழ்ச்சியைக் கூறும்போதும் (ப. 30), கடைசியாகப் பாட்டியின் நிலை அறியா பேச்சைக் குறிக்கும் போதும் (ப. 51.) இந் நிகழ்ச்சிகள் உண்மை என்பது வெளியாகிறது. தம்மை ஓடிப்போன பையன் என்றபோது இவர் உள்ளம் பட்ட பாட்டை இவரே குறிக்கிருர். அத்துடன் இவருக்கு உடன்பிறந்தவர்கள், பெற்ருேர், பாட்டி ஆகியவரைப் பற்றியெல்லாம் இதில் சுட்டுகிருர். பாட்டியின் உள்ளத்தை இவர் சுட்டும்போது நமக்கெல்லாம் நெஞ்சம் நெகிழ்கிறது. என்னைப் பொறுத்த

வரையில் என்னை இளமையில் வளர்த்த தாய்வழி பாட்டியாகிய (தாய்க்கு அத்தை) காமாட்சி அம்மாளுடைய உருவம் என் கண்முன் நிற்கிறது. என் இளமையின் நினைவுகள் என்ற நூலில் இவர்களைப்பற்றிக் குறித்துள்ளேன். மு. வ. அவர்கள் தம் பாட்டியின் பாசத்தையும் பரிவையும் சுட்டிக்காட்டியதோடு, தாம் அப் பாட்டியிடம் கொண்ட பரிவினைப் பல இடங்களில் சுட்டிக்காட்டுகிறார்.

பாட்டியார் பயித்தியம் பிடித்த நிலையில் இருந்தபோது இவர் வருந்திக் கூறிய சொற்கள் இவர் உள்ளத்தைக் காட்டுவன:

> "பாட்டியார் இப்போது பயித்தியம் பிடித்துத் தன்னையும் என்னையும் மறந்திருக்கிறார். என்னை அன்போடு பார்த்த கண்கள் இப்போது எதையோ சுற்றிச் சுற்றிப் பார்த்து மருள்கின்றன. எனக்காக அன்பு கொண்டு சோறும் காயும் அள்ளியிட்ட கைகள் இப்போது கண்ட இடத்திலெல்லாம் மண்ணும் கல்லும் அள்ளுகின்றன. அன்பு மிகுதியால் இன் குரல் கொண்டு கசிந்து, 'திருவேங்கடம்' 'திருவேங்கடம்' என்று அழைத்த வாய், இப்போது பொருளற்ற சொற்களைப் பெருக்கி எவ்வெவற்றையோ சொல்லிக் கொண்டிருக்கிறது. என்னுடைய பேச்சைக் கேட்டும் செயலைக் கண்டும் மகிழ்ந்த மனம் இப்போது எதனாலும் மகிழவில்லை; எதனாலும் அமைதி பெறவில்லை; எதையாவது எண்ணுகிறதோ, அல்லது எண்ணம் என்பது இல்லையோ," (ப. 35)

இவ்வாறு தம்மை மறந்து படைப்பிலக்கியங்கள் படைத்த பேராசிரியர் டாக்டர் மு.வ. அவர்கள் தம் சுற்றுச் சார்புகளையும் சமுதாயத்தையும் மறக்காமல், தமிழ்ச் சமுதாயமும் பாரத சமுதாயமும் உலக மக்களினமும் பண்பாடுற்று வாழ வேண்டிய வழிநெறிகளைக் காட்டி வையத்தை வாழ வைத்துள்ளார் எனக் கூறி இன்றைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

வணக்கம்!

## இரண்டாம் நாள் சொற்பொழிவு (1—2 78)

### தமிழ்

தமிழ் மொழியினையும் தமிழர் நலனையும் தமிழ் இலக்கியத்தையும் எந்த வகையிலும் போற்றியும் காக்கவும் துணிந்த மு. வ. இவற்றின் உயர் சிறப்புக்களையும் பிற மேன்மைகளையும் பண்புகளையும் எடுத்துக்காட்டத் தவற வில்லை. நேற்று நாம் கண்ட எல்லா நூல்களிலும் இவை பற்றிய குறிப்புக்கள் இருக்கின்றன. எனினும் இவை பற்றி—தனி நூல்களே இவர் எழுதியுள்ளமை பற்றி—சிறப்பாக மொழி—திறனாய்வு முறைபற்றி இன்று காணலாம் என எண்ணுகிறேன். நாட்டுப்பற்று, மொழியியற் கட்டுரைகள், மொழிப்பற்று, மொழியின் கதை முதலியவற்றுள் இவர் நம் மொழியும் நாடும் வாழவேண்டிய வகைகளை விளக்குவதோடு அவை எந்தெந்த வகையில் ஏற்றம் பெற்றுள்ளன எனவும் விளக்கிக் காட்டுகிறார். இவற்றுள் சில கருத்துக்கள் சிலருக்கு வியப்பாகவும் இருக்கும். 'இந்தி' தமிழ்க் குடும்பமே என்ற கருத்தினை இவர் கூறியுள்ளதை முன் கள்ளோ காவியமோ என்ற நூல்வழிச் சுட்டிக் காட்டியுள்ளேன். (ப. 147) இக்கருத்தை இவர் மேலும் வற்புறுத்துவதைக் காணலாம்.

'இந்தியின் தாய்' என்ற கட்டுரையில் இந்தியின் தாய் திராவிட மொழியே—தமிழே என்று நிறுவப் பல காரணங்களை மு. வ. அவர்கள் காட்டியுள்ளார்.

(மொ. க., ப. 11—17)

"இந்தியில் உள்ள எழுத்துக்கள் ட (t)' ட (d), ண, ள என்பவை திராவிட மொழிக்குரியனவே."

(ப. 15)

"வினைச்சொல்லாக்கம் முதலான இலக்கணங்களி லும் இந்தி முதலிய மொழிகள் திராவிட மொழியைப் பின்பற்றி அமைந்துள்ளன." (ப. 16)

"வாக்கிய அமைப்பில் வடநாட்டு மொழிகளெல் லாம் திராவிட மொழியினின்றும் வேறுபடவில்லை." (ப. 17)

"இந்தி முதலிய மொழிகள் வடசொற் பெருக்கம் உடையனவேனும், அவற்றின் அமைப்புக்குக் காரணமான தாய்மொழி திராவிடமொழி என்பது நன்கு விளங்கும்." (ப. 17)

என்று பல காரணங்களைக் காட்டி இவர் விளக்கியதை இன்றுவரை யாரும் மறுக்கவில்லை.

## சொல்லாட்சியும் பயனும்

தமிழ்ச் சொற்கள் பல இருக்க அவற்றைவிட்டு வேற்று மொழிச் சொற்களைப் பயன்படுத்துவாரை எண்ணி நைந்து 'தலைச் சோறு' என்னும் கட்டுரையைத் தந்துள் ளார்.

'சோறு என்னும் இனிய செந்தமிழ்ச் சொல்லை இக்காலத்தே (போலி) நாகரிகம் உடையோர் தம் நாவால் கூறவும் கூசுகின்றனர். பிறர் அச் சொல்லை வழங்கின், அவரைப் பட்டிக்காட்டார் என இகழும் குறிப்புடன் நோக்குகின்றனர். சிற்சில வேளைகளில் 'சாதம்' எனச் கூறித் திருத்தவும் முற்படுகின்றனர்" (ப. 21)

என்று எண்ணியபின் 'தலைச்சோறு' என்று சொல்லினைக் காட்டி மகிழ்கின்றார். மு. வ. இப்படியே மொழிபெயர்ப்ப தில் அமைய வேண்டிய நல்ல முறையினையும் சுட்டிக் காட்டுகிறார். (ப. 42)

இக்காலத்தில் சென்னை முதலிய பெருநகரங்களிலெல் லாம் தமிழர் அல்லாதார் கையில் பெரிய வணிக நிலையங்

கள் செயல்பட, அவர்கள் பெரும்பொருள் கொண்டு தத்தம் பகுதிகளுக்கு எடுத்துச் செல்வதைப்பற்றி அடிக்கடி நண்பர்களிடம் சொல்லி, மு. வ. வருந்துவதுண்டு. அதை 'மொழியியற் கட்டுரை'யில் நன்கு விளக்குகிருர். சங்க காலத்தில் தமிழர் வேங்கடம் கடந்து பொருள் பெருக்கி வந்த நிலைகளையெல்லாம் சுட்டி (அகம் 31, 205, 127, 511) இன்று இப்பொருள் பெருக்கமும் போக்கும் திசைமாறி உள்ளதைக் காட்டுகிருர்.

'மகார்' என்ற சொல்லைவிட்டு 'மக்கள்' என்ற சொல் தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே தமிழில் வழங்கிய தன்மையைச் சுட்டிக்காட்டி, அது தவருயினும் 'பெரும் பாலோர் செய்யும் தவறு வாழ்க்கையில் சடங்காகி விடுவது' போன்று இதுவும் நிலைத்த தன்மையினையும் தொல்காப்பியரும் ஏற்றுக்கொண்ட சூழலையும் சுட்டிக் காட்டுகிருர். 'மகார்' என்ற பெயரின் அடிப்படைக்கான மகன், மகள் பற்றிய விளக்கங்களும் பிறவும் இவர்தம் மொழி வளர்க்கும் பான்மையினை நன்கு காட்டுவனவாகும்.

'கல்லாத பேர்களே நல்லவர்கள்' என்ற தலைப்பில் இவர் தமிழ்ச் சொற்களின் வரலாற்றையும் அவற்ருெடு கலந்து போட்டியிடும் பிறமொழிச் சொற்களின் தன்மையினையும் தமிழ்ச் சொற்களின் பொருள் குறிக்கும் அடிப்படை நிலையினையும் பிறவற்றையும் தெள்ளத் தெளியக் காட்டும் முறையினைப் படிக்கும்போது, நாம் நம்மை மறந்து தமிழ் மொழிக்கு எவ்வளவு கேடு செய்கிருேம் என்பது நன்கு புலப்படும். சில நல்ல சொற்கள் கல்லாத மக்கள் வாழும் நாட்டுப்புறங்களில் இன்றும் நிலைத்து வாழும் தன்மையை எண்ணியே இக்கட்டுரைக்கு இவர் தலைப்பினை இட்டுள்ளார். 'நாட்டுப்புறத்துக் கல்லா மக்கள் பேச்சில் இன்னும் சூரியனும் சந்திரனும் இடம்பெருமல் பொழுதும் நிலாவும் இருத்தலைக் காணலாம்' என்று கட்டுரையை முடிக்கின்ருர். மொழி காப்பதில் மட்டுமன்றித் தமிழ்ச் சமுதாய நெறி, தமிழர் பண்பாடு முதலியவற்றை இன்றும் கெடாமல் காப்பாற்றுபவர்கள் நாட்டுப்புற

மக்களே என்பது இவர் உள்ளக் கிடக்கை: உண்மையும் இதுதானே.

ஆங்கிலத்தில் எழுத்துக் கூட்டல் முறையைக் (spelling) கற்பதற்காக மாணவர் மேற்கொள்ளும் முயற்சியில் கால் பங்கும் தமிழில் சந்தி ஒலிகளைக் கற்பதற்காக மேற்கொள்வதில்லை. அயலாரிடம் பெருமை பெறுவதற்காக ஆறு மைல் ஓட முனையும் மகன், அன்னையின் அன்புக்காக அரைமைல் நடத்தலும் பெருந்தொல்லை என்கிறன்", (ப. 140) என்று சந்தி அறியாது தடுமாறியும் கவலையுறுத தமிழ் மாணவர் நிலையை எண்ணி நைகிறர் இவர்.

> "அண்ணன் அழத், தம்பி சிரிப்பான்" என்னும் வாக்கியத்தில் காணப்படுதல்போல், ஒரே இடத்தில் சந்தியிலக்கணம் நிறுத்தற்குறி ஆகிய இரண்டையும் பயன்படுத்துவது பொருந்தவில்லை. பழங்காதத்துக் குடுமியையும் இக்காலத்துக் கிராப்பையும் ஒரே தலையில் காண்பதுபோல் உள்ளது." (ப. 160)

என்று வேடிக்கையான உவமை காட்டித் தவறுகளைக் களையும் இவர் போக்கு மொழிக்கு அரண் செய்வதாகும்.

பெரும் இலக்கண ஆசிரியர்கள் தவறு செய்தாலும் கண்டிக்கத் தவருதவர் இவர். பவணந்தி, தொல்காப்பியர், வீரசோழிய ஆசிரியர் போன்ருேரும் தவறு செய்ததைச் சுட்டிக்காட்டி உண்மையை அஞ்சாது இவர் விளக்கியுள்ளார்.

> "நன்னூலார் இங்குச் செய்த பிழை போலவே, வேறு சில இடங்களிலும் பிழைபடப் பிரித்து விதிகள் எழுதியுள்ளார். வீரசோழியம் என்னும் இலக்கண நூல் நன்னூலுக்குச் சிறிது முற்பட்டது. அந் நூலாசிரியர் பிழை செய்யினும் நன்னூலார் செய்திருக்க வேண்டுவதில்லை"(ப. 197)என்றும் "நேர்ந்த இத் தவறுகளைத் தவறுகள் என்று சொல்லாமல், இவற்றிற்குக் காரணம்

கூறிக் காக்க முயன்ற தொல்காப்பியனுர் மேலும் சில தவறுகள் செய்துள்ளார். அவரைப் பின்பற்றிய பவணந்தியாரும் அதே தவறுகளைச் செய்துள் ளார்.''(ப. 256)

என்றும் குறைகளைத் திட்டவட்டமாகக் காட்டித் திருத்து வதைப் 'பெரியோர் சிறுபிழை' என்ற தலைப்பில் (ப. 191–258) நன்கு காணலாம். இந்நூலில் தாம் கொண்ட கருத் தினை எடுத்துக் காட்டவும் நிறுவவும் மொழி நலம் காக்கும் மரபை விளக்கவும் இவர் மேலை நாட்டுப் புலவர் பலரை யும் வட நாட்டுப் புலவர் பலரையும் உடன் கூட்டிக் காட்டி யுள்ளார். இந்நூல் முழுவதிலும் பேரறிஞர் பலருடைய மேற்கோள்கள் இடம்பெறுவதோடு, அவற்றின் துணை கொண்டு தமிழ்—திராவிட மொழிகளின் தன்மை, அமைப்பு, வாழ்வு, வளம் ஆகியவை பற்றியும், இன்றைய நிலைபற்றியும் இவர் தெள்ளத் தெளிவாகக் காட்டி, தமிழ்மொழியின் தனித் தன்மையும் தகைமையும் என்றும் வாழ வழிகோலி யுள்ளார்.

## தமிழ் நாட்டு நிலை

இவ்வாறே இவரது 'மொழிப்பற்று' என்ற நூலிலும் தமிழ், தமிழ்நாடு, அந்நியமொழி ஆகியவை பற்றிய பல கருத்துக்கள் பேசப் பெறுகின்றன.

"மொழியின் உயிர் புலவரிடம் இல்லை; பொது மக்களின் உள்ளத்தில்தான் உள்ளது. மக்களின் வாழ்க்கை அரசியலை அடிப்படையாகக் கொண்டது. ஆகையால் எந்த மொழி அரசியலில் விளங்குமோ அந்த மொழிதான் மக்கள் மொழியாக விளங்கும்... ஆகவே தமிழ்நாட்டின் ஆட்சி தமிழில் நடைபெற்றால் தான் தமிழைக் கற்றுப் போற்றுவார்கள், தமிழ் வாழ வழி உண்டு;' (ப. 12)

என்று நாட்டு அரசியல் மொழி–ஆட்சிமொழி தமிழாக வேண்டும் என்று வற்புறுத்திக் கூறுகிறர். மேலும் இன்று

தமிழர் செய்ய வேண்டுவன என்னென்ன என்பதை வரையறுத்துக் காட்டுகிறார்.

> "பிற மொழியைப் பழிப்பதில் உள்ள ஊக்கத்தில் கால் பங்காவது தம் மொழியைப் போற்றுவதில் உள்ளதா என்று கவனித்துக் கொள்ள வேண்டும். கடைத் தெரு முதல் பல்கலைக்கழகம் வரையில் தமிழர்க்குத் தமிழ்மொழியில் பற்று உள்ளது என்பதற்குச் சான்று வேண்டும்...இந்தி புகுவதற்கு முன்னமே பல்கலைக் கழகங்களிலும் அலுவலகங்களிலும் ஆங்கிலம் இருந்த இடத்தில் தமிழ் விளங்குமாறு செய்ய வேண்டும்" (ப. 19-24)

என்று ஆக்க நெறிக்கு வழி கோலுகிறார்.

> "பம்பாயிலும் கல்கத்தாவிலும் (திருப்பதியிலும்) தமிழில் படித்துப் பட்டம் பெற வழியில்லை, ஆனால் தமிழ்நாட்டில் எந்த மாகாணத்தவர் வந்தாலும் தமிழில்லாமல் வேறுமொழி படித்துப் பட்டம் பெற வழியிருக்கிறது- தமிழனே வேறுமொழி படித்துப் பட்டம் பெற வாய்ப்பு இருக்கிறது" (ப. 47)

என்று தமிழ் நாட்டுக் கல்வித்துறையில் இன்றும் இருக்கும் குற்றத்தினைச் சுட்டிக் காட்டுகிறார். தமிழ் முதல்பகுதி எனப் பெயரளவில் மாறிற்றே ஒழிய, அது பதினான்கு மொழிகளுள் ஒன்றாகத்தானே இன்றும் இருக்கிறது.

> "தமிழ் நாட்டில் பத்திரிகைத் துறையில் நேற்று வரையில் தமிழ் பிற்போக்காக இருந்ததற்கு, ஆட்சி மொழியாகிய ஆங்கிலத்துக்கு இருந்த செல்வாக்கே காரணம். இவ்வாறு பத்திரிகைத் துறையில் தமிழ் செல்வாக்குடன் விளங்க முடியாமல் இருந்ததனால் நாட்டிற்குத் தீமை விளைந்தது. இன்னும் விளைந்து வருகிறது" (ப. 71)

என்று பத்திரிகை உலகில் தமிழ் வாழா நிலையைச் சுட்டிக் காட்டி, எதிர்காலமாவது நன்றாகாதா என ஏங்குகிறார் இவர். இவ்வாறே இன்னும் பல கட்டுரைகளில் தமிழ்

மொழி நாட்டில் நன்கு வளரவேண்டிய வழித் துறைகளைக் காட்டி ஆக்கப் பணிக்கு அடிகோலுகிறார்.

## எழுத்தும் சொல்லும்

இந்த அடிப்படையிலேயே எழுத்தின் கதை, சொல்லின் கதை, மொழியின் கதை என்ற மூன்று சிறு நூல்களும் எழுந்தன. இம்மூன்றிலும் அவ்வவற்றின்வரலாறு, அமைப்பு வைப்புமுறை, வழக்காறு இன்னபிற இயல்புகளையெல் லாம் கற்றாரும் கல்லாரும் ஒருசேர உணர்ந்து போற்றும் வகையில் எழுதியுள்ளார். இவரைப் போன்று தமிழ் மொழிக்குத் தொண்டு செய்தவர் இவரினும் வேறு இலர் என்று திட்டமாகச் சொல்லலாம்.

'எழுத்தின் கதை'யிலே சித்திர எழுத்துக்கள் எவ்வெவ் வாறு தோன்றி வளர்ந்தன என்பதையும், அடுத்து ஆப்பு வடிவ எழுத்துக்கள் நிலை பற்றியும் விளக்கிக்கூறி, பின் அரபு, சீன, தமிழ் எழுத்துக்களைப் பற்றி எடுத்துக் காட்டு கிறார். 39 பக்கமே உள்ள இந்தச் சிறுநூலில் எழுத்தின் வடிவம் பற்றி எண்ணிப் பார்க்கக் கூட முடியாத பல நுண்ணிய உண்மைகளை இவர் எடுத்துக் காட்டி மொழியின் அடிப்படைத் தன்மையினை யாரும் அறிய விளக்கிவிட்டார் எனலாம்.

> "இப்போது நாம் எழுதும் எழுத்துக்கள் ஒலிகளின் அடையாளங்கள். அந்தப், பழைய எழுத்துக்கள் பொருள்களின் படங்கள். படங்களாக இருந்த எழுத்துக்கள் மாறி மாறித்தான், நாம் எழுதும் எழுத் துக்கள்—ஒலிகளின் அடையாளங்கள்—ஏற்பட்டன" (ப. 12)

என்றும்,

> "நம்முடைய எழுத்துக்களில் கோடுகள் மிகுதி யாக இருக்கின்றன அல்லவா? ஆப்பு வடிவ எழுத்துக் களிலிருந்துதான் இப்படிக் கோடுகள் எழுதக் கற்றுக் கொண்டோம்" (ப. 18).

என்றும் விளக்கி, வேறுவகையிலே வளர்ச்சி அடைந்த அரபு எழுத்துக்கள், சீன எழுத்துக்கள் ஆகியவற்றை விளக்கிக் கடைசியாகத் தமிழ் எழுத்துக்களின் தன்மையை விளக்குகிருர்.

> "எழுத்து முறை என்பது மொழிக்கு ஒரு கருவி. அது குறையற்றதாக இருப்பது அருமை. அது கூடிய வரையில் பயன் பட்டால் போதும். தமிழ் எழுத்து முறை அந்த வகையில் போதுமான பயன் தருவதாக இருக்கிறது. கூடியவரையில் நன்ருகவும் அமைந்திருக் கிறது" (ப. 34)

என்று முடிக்கிருர்.

அடுத்து, 'சொல்லின் கதை'யிலும் சொல்லின் பிறப்பு வழக்கு, இசை, இலக்கணம் முதலியவற்றைச் சுட்டி, 'இடப்பேச்சுகளும் கொச்சை மொழிகளும்' என்ற இறுதித் தலைப்பில் சில திருந்தாவகைச் சொற்களைப் பற்றியும் விளக்கம் தருகிருர். இலக்கண மரபில் வழங்கும் பல சொற்களையும் அவற்றின் தேவைகளையும் மரபு நெறியில் வழங்கும் பல சொற்களையும் தேவைகளையும் பிறவற்றை யும் விளக்கி,அவை எவ்வெவ்வாறு மொழிகளோடுசேர்ந்து வழங்கி வருகின்றன என்பதையும் காட்டுகிருர். சொற்கள் தோன்றிய கால எல்லையில் இருந்த முறையினையும் முதலில் சுட்டுகிருர். எனவே இச் சிறு நூல் மொழிக்கு ஆக்கமாகிய சொல்லைப் பற்றி யாவருக்கும் விளங்க உரைக்கிறது.

இவ்வாறே மொழியின் கதையும். மொழியல்லாத பழங் கால நிலை தொட்டு, மொழி ஓர் அருங்கலையாய் வளர்ந்த இந்த நாள் வரையில் நடந்த அந்தநெடுவழியினைச் சுட்டி, அந்தப் பெரும் யாத்திரையில் மொழி பெற்ற மாற்றங்கள் பற்றியும் மொழிகளில் எழுந்த எழுதா இலக்கியம் எழுத்து, இலக்கியம் ஆகியவை பற்றியும் பிறவற்றையும் நன்கு காட்டி, மொழியின்றேல் வாழ்வில்லை என்பதை நன்கு விளக்குகிருர், இதற்கென இவர் எடுத்தாளும் உவமை

களும் விளக்கங்களும் கற்ருரையும் பிணித்து உணர வைக்கும் தன்மையில் உள்ளன. இறுதியாகத் தம் தாய் மொழியை நினைந்து, 'ஆகவே மொழி ஒரு அருமையான கலை என்றும், நம்முடைய தாய்மொழி நமக்குப் பரம்பரைச் சொத்தாக வந்திருக்கும் தனிச் சிறப்புடைய கலை என்றும் உணர வேண்டும்' என நமக்கெல்லாம் உணர்த்துகிருர். இத் தொன்மை வாய்ந்த பரம்பரைச் செல்வத்தைக் காப்பதற்கெனவேதான் இவர், நாம் இதுவரையில் கண்ட பல நூல்களை எழுதி, எண்ணற்ற கருத்துக்களை வாரி வீசி நமக்கெல்லாம் வழிகாட்டியாக நின்று விளங்குகின்ருர்.

## மொழிநூற் புலவர்

இச் சிறு நூல்களைத் தவிர்த்து டாக்டர் மு.வ. அவர்கள் மொழிநூற் புலவர் எனப் போற்றப்பெற்ற வகையில் சிறந்த இரு நூல்களை—'மொழி நூல்', 'மொழி வரலாறு' என்ற இரண்டினையும் எழுதி, அந்தத் துறைக்கே ஒரு வழிகாட்டியாக அமைந்துள்ளார். தமிழகத்தில் இன்று அத்துறை ஓரளவு வளர்ச்சி பெற்றுள்ளது என்ருலும் முப்பது ஆண்டுகளுக்குமுன் அத்துறையில் கருத்திருத்துவார் இல்லை. எங்கோ முதுகலை, புலவர் வகுப்புகளுக்குப் பாடமாக வைக்கப்பட்ட ஒரு சில பகுதிகளை அப்படியே ஆங்கில நூல்களைப் பின்பற்றியோ இரண்டொரு மொழி பெயர்ப்பு நூல்களைப் பின்பற்றியோ சிலர் பாடம் நடத்தி வந்தனர், எனினும் அத்துறையில் ஆழ்ந்த புலமையும் விளக்கும் திறனும் உடையோர் இல்லை. திரு. ரா.பி. சேதுப் பிள்ளை அவர்கள் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் இருந்தபோது ஓரளவு இத்துறையில் கருத்திருத்தி சிலவற்றை நன்கு தொகுத்து நூல்கள் வெளியிட முயற்சி செய்தார் என்ருலும், அவர் சென்னைக்கு வந்த பிறகு, அந்த எண்ணத்தை விட்டு முழுக்க முழுக்க இலக்கியத் துறையிலே ஈடுபட்டார். ஏதோ அரசியல் சம்பந்தமாக மொழிபெயர்ப்பு முதலியவற்றில் அவர் தம் மொழியியல் புலமை பயன்பட்டதாயினும் நூலாக அமைந்து வெளிவரும் அளவு அவர் கருத்திருத்தவில்லை. கால்டுவெல் போன்ருேர்தம் பெருநூல்களையெல்லாம்

நன்கு பயின்ற போதும் அவற்றை மொழிபெயர்த்து வைத திருந்தும் ஏனோ அவற்றை வெளிக்கொணரவில்லை. ஆனால் மு. வ. அவர்கள் அத்துறையில் நன்கு பயின்று இரண்டு நல்ல பெரிய நூல்களை வெளியிட்டு மொழி வாழ்வினைத் திறம்படச் செய்துள்ளார். இந்த இரண்டு நூல்களையும் தமிழ் பயிலும் மாணவரும் மற்றவர்களும் நன்கு பயின்றுள் ளார்கள்; பயின்றும் வருகிறார்கள். 'தமிழ் மொழி வரலாறு' பற்றி இவர் எழுதுவதற்கு முன்னரே சிலர் எழுதியிருக்கிறார் கள். என்றாலும் அவை பொதுவான மொழி அமைப்பின் இலக்கணமாக அமையாது. திராவிட மொழிக்குடும்ப — தமிழ் மொழிக் குடும்ப வரலாறாக அமைந்தவை. டாக்டர் மு. வ. அவர்கள் எளிமையாகச் சிறுவர்கள் புரிந்து கொள் ளும் வகையில் தம் கருத்துக்களை விளக்கியுள்ளார். மேலும் பல மேலை நாட்டு ஆய்வாளர்தம் கொள்கைகளை யும் கருத்தினையும் உட்கொண்டு பலவற்றைக் துருவித் துருவி ஆய்ந்து, பின்வருவோர் பலரும் அதன் வழியே கருத்திருத்திச் செயல்படும்வகையில் தம் மொழி வரலாறு என்னும் நூலை எழுதியுள்ளார். அப்படியே மொழி நூலை யும் ஒலிவகை தொடங்கி சொற்றொடர் வரையில் இரண் டிற்கும் இடைப்பட்ட பல்வேறு மாறுபாடுகள், பிரிவுகள் இவற்கையெல்லாம் விளக்கி,நன்கு காட்டி, பல மேனாட்டு அறிஞர்தம் மேற்கோள் சான்றுகளுடன் ஆக்கியுள்ளார். இன்றைய தமிழ்நாட்டு மொழிநூல் ஆய்வாளர் பலருக்கும் இந்த நூல்கள் இரண்டும் முன்னோடிகளாய்—வழிகாட்டி களாய்—விளக்கங்களாய் உள்ளன. ஆய்வின் பெருக்கத் தால் - புதிய கண்டுபிடிப்புகளால் ஒரு சில மாறுபாடுகள் காணப்படும் இந்த மொழியியல் அடிப்படையில் டாக்டர் மு. வ. ஆய்ந்துணர்ந்து கண்ட உண்மைகள் இன்றும் அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் உள்ளமையை எண்ணிப் போற்றக் கடமைப்பட்டிருக்கிறோம். இந்த மொழிநூல் எழுத இவர் எடுத்துக்கொண்ட முயற்சியை நான் அருகிலிருந்து கண்டவன். மேலும் அவர் பயின்ற உடன் துணையாகக் கொண்ட ஆங்கில நூல் பட்டியலும், அவர் தாம் எழுதிய இந்நூலுக்காக அவற்றையெல்லாம்

பயின்று செலவிட்ட பல நாட்களை எண்ணவைக்கும் என்பது உறுதி.

மேலும் நாவல் போன்றவற்றிற்கும் வேறு பிறவற்றிற்கும் சிறு சிறு முன்னுரையோ அல்லது மற்றவர்தம் அறிமுகமோ கொண்டு நூல்களை வெளியிடும் இவர் இதற்கு மட்டும் நீண்ட முன்னுரை ஒன்று எழுதியிருப்பதையும் எண்ணிப்பார்க்கவேண்டும். இம் முன்னுரையில் இத்தகைய ஆய்வும் நூலும் இன்றியமையாதன என்பதை நன்கு சுட்டிக் காட்டுகிறார்.

"மொழியைப் பேசுவோர்க்கும் எழுதுவோர்க்கும் பிணக்கும் போராட்டமும் உள்ளன. மொழியின் பழமையைப் போற்றுவோர்க்கும் மொழியின் வளர்ச்சியை விரும்புவோர்க்கும் பகை வருகின்றது. இந்தப் பிணக்கு, போராட்டம், பகைமை எல்லாம் வேண்டாதவை; வீண். இவ்வாறு உணர்த்த வல்லது மொழியின் ஆராய்ச்சியே."

"இலக்கியம் என்பது மொழியின் நிலை பெற்ற வாழ்வு. இலக்கணம் என்பது மொழியின் இறந்தகால நிலையை விளக்கி நிகழ்கால நிலையைச் சொல்ல முயல்வது; மொழியியல் என்பது மொழியின் வரலாற்றை விளக்குவதோடு நிகழ்கால நிலையைத் தெளிவாக்கி எதிர்காலப் போக்கையும் அறிவிக்க வல்லது."

"இதுபோன்ற அரிய உண்மைகளையும் கருத்துக்களையும் கற்கத் தொடங்குவார்க்கு மொழிநூல் ஒரு தனிக் கலையாக விளங்கும். ... இந்த அருங்கலை தமிழ் நாட்டில் பரவுவதற்குக் காரணமாக இருந்து மொழித் தொண்டாற்றியவர் டாக்டர் கால்டுவெலே. ... மொழி நூல் ஆராய்ச்சிக் கண்கொண்டு தொல்காப்பியம் முதலான பழைய நூல்களைக் காணக் காண, தமிழ்மொழியின் சிறப்பும் தமிழ் சான்றோரின் பெருமையும் நன்கு விளங்குகின்றன" (முன்னுரை)

என்று இம்மொழியியல் பற்றிய உண்மையினை விளக்கி, தாம் முதுகலை வகுப்பில் பாடமாக இதை நடத்த நேர்ந்தமையே இந்நூல் வெளிவரக் காரணம் என்பதையும் சுட்டியுள்ளார். மொழி வரலாறும் அத்தகையதே.

தமிழ்மொழி வரலாற்றைத் தனியாக எழுத நினைத்த இவர் முதலில் பொதுவான மொழியின் வரலாற்றினை எழுதி, அதனோடு உலக மொழி இனங்களையும் திராவிட மொழிகளையும் விளக்கு முகத்தான் இந்த நூலை யாத்துள்ளார். இந்த வகையில் இவரே முன்னுரையில் குறிப்பிட்டபடி தமிழில் பொதுவான மொழி வரலாற்று நூல் இல்லை என்பது தெளிவு. இவர் இந்நூலின் முதலில் குறித்துள்ள மேற்கோள் பகுதியில் வரும் நூல் வரிசையைக் காணின் இவர் இவ்வளவு நூல்களைப் பயின்றுள்ளனரா என்ற மலைப்பு உண்டாகும். அதில் 45 நூல்களை அகர வரிசைப் படுத்தித் தந்துள்ளார் இவர். இவற்றுள் ஜெஸ்பர்சன் (Jesperson) மாக்ஸ் முல்லர் (Max Mullar) வெண்டிரிஸ் (J. Vendryes) போன்றோர்தம் நூல்களைத் துருவித் துருவி இவர் கற்ற காலையின் உடன் இருந்த என் போன்றோர்க்கும் பல நுணுக்கங்களை அவ்வப்போது இவர் விளக்கியது இன்னும் நினைவில் உள்ளது. இந்நூலுள் இவருக்கு இயல்பாக உள்ள உலக ஒருமைகாணும் கருத்துகளும் மொழி அடிப்படையில் அமையவேண்டிய நிலைகளும் ஆங்காங்கே சுட்டிக் காட்டப்பெறுகின்றன. மற்றும் மொழி தோன்றி வளர்ந்த வரலாற்றினையும் பிறவற்றையும் பிள்ளைகளுக்குக் கதை சொல்வதுபோலப் பல உவமைகளையும் காட்டி விளக்கும் திறன் எண்ணத்தக்க ஒன்றாகும்.

> "மொழியின் ஒவ்வொரு சொல்லும் மூளை பல வகையாக எண்ணி எண்ணி வளர்த்த வளர்ச்சியைக் காட்டுகிறது."

என்று மேலைநாட்டு அறிஞர்[1] குறித்த உண்மையினையும் இவ்வாறே பிறர் தொட்டுக்காட்டிய பல நுணுக்கங்களை

1. (G. K. Zipf - The Psycho - Biology of Language)

யும் இவர் பல்வேறு தலைப்புக்களில் விளக்கிக் காட்டு வதைக் கற்றோர் பயிலின் வியவாதிரார்.

மொழியில் சில சொற்கள் மக்களின் மூட நம்பிக்கைகளின் காரணமாகத் தோன்றி வளர்ந்து இன்றளவும் வழக்கத்தில் உள்ள தன்மையினைத் தனியாக ஏழாவது பகுதியில் நன்கு விளக்கியுள்ளார்.

பாட்டனுடைய பெயரைப் பேரனுக்கு இட்டு அவரைப் 'பேரன்' ஆக்கிய முறையும் (ப. 45), யெட்டோ (Yeddo) டோகியோ (Tokyo) ஆன வரலாறும் (ப. 46), முருங்கைக் காய் கொம்புக் காயான வரலாறும் (ப. 46), செத்தாரைத் 'துஞ்சினர்' என்ற சொல் மரபும் (47), உப்பைச் சர்க்கரை என வழங்கும் மரபும் (48) பிறவும் நன்கு சுட்டிக் காட்டப் பெற்று மொழி மரபுக்கு இவை வேறுபட்டவையாயினும், மூடப்பழக்க வழக்கங்களால் இவையும் மொழியில் நிலைத்த இடம் பெற்ற தன்மையை விளக்குகிறார். இவ்வாறே வெறும் வழக்கத்தின் காரணமாகச் சில சொற்கள் (இலக்கண மரபில் மாறுபடினும்) மொழியில் இடம் பெற்று நிலைபெற்ற தன்மையினையும் சுட்டிக் காட்டுகிறார். இவ்வாறே மக்கள் பொது வழக்குச் சொற்கள் பல இலக்கிய வழக்கினைப் பெற்று இலக்கியச் சொற்களாகவே ஆனமை குறிக்கப் பெறுகின்றது. இவ்வாறு மக்கள் வாழ்வொடு பலவகையில் பின்னிப் பிணைந்த வழக்குமொழிகள் பின்பே இலக்கண மரபினையும் முறைகளையும் விதிகளையும் பெற்றன என விளக்கும் இவரது ஒன்பதாவது அதிகாரம் தான் இலக்கணத்தைத் தொடுகிறது. பின்பும் குழந்தை மொழி என்ற தலைப்பிலும் பிறவகையிலும் இலக்கண வழியெனவும் மரபெனவும் கொள்ளக் கூடிய சொற்களையும் குறிக்கத் தவறவில்லை. பொருளற்ற குழந்தை ஒலிகொண்டு பொருள் காணும் பெற்றோர் நிலையில் தாமும் இருந்து அச் சொற்களையெல்லாம் மொழிவழிப்படுத்தும் இவர் உள்ளம் உயர்ந்ததாகும்.

"குழந்தையின் கல்வியில் காணும் பல உண்மைகளும், மொழி வளர்ச்சியின் அடிப்படையாக அமைந்த உண்மையாகும்" (ப. 213)

என்றும் 'நானுக்கு' என்றும் 'நீக்கு' என்றும் குழந்தை பேசிப் பெற்றோர் செவிக்கு அமிழ்தம் ஊட்டும் (ப. 213) என்றும், காட்டி குழந்தை மொழிகள் இலக்கணமற்றவை போன்று தோன்றினும் அவற்றையும் இலக்கண மரபில் இவர் இணைத்துக் காட்டுகிறார்.

இவ்வாறு பொதுவாக மொழிகளின் அடிப்படை நிலைகளையும் அவற்றுள் பல்வேறு காரணங்கள் இடைப்பட்டுத் தோன்றும் சொற்களையும் அவற்றில் அமைந்த பொருளமைதி முதலியவற்றையும் விளக்கமாகச் சுட்டிக் காட்டி, பிறகே மொழிகள் முறைப்படி பெற்ற இலக்கண மரபினைக் காட்டி செல்லுகிறார், அப்படியே மொழிக் கலப்பினாலும் சொற்களைக் கடன் வாங்குவதனாலும், உண்டாகும் மாற்றங்களையும் நிலைகளையும் விளக்குகிறார். பின்னர் உலக மொழிகளின் பல்வேறு வகைப்பட்ட தன்மைகளை விளக்கி அவ்வவற்றின் தன்மை, இயல்பு, முறை, மரபு ஆகியவற்றையும் சுட்டிக் காட்டுகிறார். இறுதியாக எழுத்து என்னும் தலைப்பில் எழுத்துமொழி பெற்ற சிறப்பினையும் எழுத்து எழுந்த நிலையினையும் எழுத்துக்கள் காலந்தொறும் பெற்ற மாறுபாட்டினையும் பிறவற்றையும் நன்கு விளக்கிக் காட்டுகிறார். பல்வேறு வகைப்பட்ட எழுத்துக்களின் வகைகளை விளக்குவதோடு வட்டெழுத்து, வடஇந்திய எழுத்துக்களின் வேறுபாட்டினையும் விளக்குகிறார். இறுதியாக எண்கள் பெறும் படிவத்தையும் அவை கல்வெட்டுகளில் பெற்ற வளர்ச்சியையும் காட்டி நூலை முடிக்கிறார். இவருடைய நூல்கள் அனைத்திலும் இம்மொழி வரலாறு கண்மணி போன்ற ஒன்று எனக் கொள்ளல் தவறில்லை. பலருக்கும் புரியாத எத்தனையோ நுணுக்கங்களை இவர் தெளிவுடன் காட்டியிருப்பதை நூல் வழியே கண்டு அறியுமாறு வேண்டி மேலே செல்கின்றேன்.

எனவே இந்த இருநூல்களும் மொழியின் எல்லா வகையான தன்மைகளையும், அமைப்பு முதலானவற்றையும் வரலாறு முதலானவற்றையும் காட்டுவதோடு, அவை சமுதாயத்துக்கு உதவும் தன்மைகளையும் விளக்குவனவாகும். இவர் முன்னுரையில் குறிப்பிட்டபடி பாடம் நடத்திய குறிப்பின் வழியே இவற்றை எழுதினுலும், முன் குறிப்பிட்டபடி இத்தகைய மொழிநூல், மொழி வரலாறு முதலியன மொழி பற்றி மக்கள் உள்ளங்களில் எழும் பிணக்கையும் மாறுபாட்டையும் நீக்க வழி கோல வேண்டுமென்பதே இவர் விருப்பம். ஆம்! எந்த வகையில் நூல் எழுதினுலும் அதன் அடிப்படை சமுதாயம் இணைந்து வேறுபாடற்று வாழவேண்டுமென்பதே இவர் குறிக்கோள். மொழி நூலும் மொழி வரலாறும் அந்த வகையில் ஆக்கப் பணிக்கு வழிகோலும் என்று உண்மையில் இவர் நம்பினுர். இந்த நெறியில் மொழிகளை ஆராய்ந்தால் மொழிக்காழ்ப்பும் பிற வேறுபாடுகளும் உண்டாகா என்பது உண்மையன்றே!

இத்த இரு நூல்களைப் பற்றியும் இவற்றில் இவர் காட்டும் மொழி அமைப்பு, சொல்லமைப்பு, இலக்கண மரபு, எழுத்து வகை, மொழி தோன்றிய வரலாறு, மொழிக் குடும்பங்கள், அவற்றின் வரலாறு இவைகளையும் எழுதத் தொடங்கின் அது பெருநூலாக முடியும். மேலும் இங்குள்ளவர்களும் நாட்டு அறிஞர்களும் இவற்றை நுணுகி ஆராய்ந்துள்ளனர் என்பதும் தெளிவு. எனவே இவற்றுள் நான் மேலும் நுழைந்து ஒவ்வொன்ருக எடுத்து காட்ட வேண்டா என எண்ணுகிறேன்.

## இலக்கியத் திறனுய்வாளர்

தமிழ்மொழி-உலகமொழிகள் ஆகியவற்றைப் பற்றித் துருவித் துருவி ஆராய்ந்து அவற்றின் திறன் போற்றி, உயர்ந்த இரு பெரு நூல்களையும் அவற்ருெடு சில சிறு நூல்களையும் எழுதி, மொழிக்கு-சிறப்பாகத் தமிழ் மொழிக்கு இவர் செய்த தொண்டுகளுள் ஒரு சிலவற்றை இங்கே கண்டோம். முன்னர் இவர்தம் இலக்கியப் படைப்பின்

திறனையும் அதில் வாழ்வியல் காட்டிய திறனையும் அவற்றின் வழியே உருவாகிய பல்வேறு நாவல், சிறுகதை நாடகம்,கட்டுரை முதலியவற்றின் துணைகொண்டு ஓரளவு கண்டோம். அப்படியே இவருக்கு வழிகாட்டிகளாக நின்ற பெரியவர்களைப் போற்றி எடுத்தாண்ட மரபினையும் கண்டோம். இனி இவர் பண்டைத் தமிழ் இலக்கியத்தின் திறனாய்ந்த மரபினை ஓரளவு காட்டி அமையலாம் எனக் கருதுகின்றேன்.

இலக்கியத் திறனாய்வு முறையினைப் பல ஆண்டுகள் மாணவர்களுக்குப் பலவகையில் இவர் கற்பித்தும் சுட்டிக் காட்டியும் விளக்கியவர். இதற்கென ஆங்கிலத்தில் பல நூல்களைப் பயின்றார், அவற்றுள் பல பின் இணைப்பில் உள்ளன. இத்துறை தமிழுக்குப் புதியது. எனவே, தமிழில் இத்துறை பற்றிய நூல்கள் இல்லாத குறையைப் போக்கி யவர் இவர் எனல் பொருந்தும். மொழி வரலாற்றுத் துறையில் இவர் முன் நின்றமை போன்றே இலக்கியத் திறனாய்வுத் துறையிலும் தமிழில் இவர் முன்னோடியாவார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பட்டங்களாகிய பீ.ஓ.எல்., பீ.ஓ.எல்- (ஆனர்சு) எம்.ஏ. முதலிய பட்டங் களைப் பெறப் பாடத்திட்டங்களை அமைத்தபோதும் அவற்றை அவ்வப்போது செப்பம் செய்த போதும் இத் திறனாய்வுக்குரிய பாடத்திட்டங்களையும் நூல்களையும் வகுத்து வரையறை செய்தவர் இவரேயாவர்.

இத்தகைய திறனாய்வு முறைபற்றி ஆங்கிலத்தில் எத்தனையோ நூல்கள் வந்துள்ளன; வந்துகொண்டே யிருக்கின்றன. தமிழிலும் தற்போது சில நூல்கள் வருகின்றன. எனினும் போதிய அளவு இத்துறையில் தமிழ்ப் பேரறிஞர் கருத்திருக்கவில்லை என்பது தெளிவு. டாக்டர் மு.வ. அவர்கள் இத்திறனாய்வு முறைபற்றி 'இலக்கியத் திறன்', 'இலக்கிய மரபு', 'இலக்கிய ஆராய்ச்சி' போன்ற நூல்கள் எழுதியதோடு அமையாது, ஓரளவு தமிழில் உள்ள பழங்காலத்தில் எல்லா இலக்கியங்களையும்

தாமே திறனாய்ந்து நூல்களை எழுதியுள்ளமை நாடு அறியும். புத்திலக்கியப் படைப்பில் நாவல் முதலியவற்றை எழுதிப் புகழும் பொருளும் பெறுவார் - பெற்றவர் ஒரு சிலர் இருப்பினும், அவர்கள் இத்தகைய மொழி ஆய்வு, திறனாய்வு முதலியன செய்யவில்லை என்பதையும் நாடறியும். ஆனால் டாக்டர் மு.வ. அவர்கள் தொடாத துறையில்லை என்னுமாறு எல்லாத் துறைகளுக்கும் நூல்கள் எழுதியமை போன்று இவற்றையும் ஆய்ந்து அலசி நூல்கள் வெளியிட்டமை உயர்ந்த நிலையாகும். அதிலும் திறனாய்வுத் துறையின் இலக்கணத்தைச் சுட்டிக் காட்டிய தோடு, தாமே இலக்கியங்களையும் திறனாய்ந்த 'திறன்'— செம்மையாகத் திறனாய்ந்த திறன் — போற்றக் கூடிய ஒன்றாகும்.

இலக்கியங்களைத் திறனாய்ந்த மரபினை நாம் இங்கே மூன்று வகையாகக் கொள்ளலாம் என எண்ணுகிறேன். ஒன்று முழு நூல்களாக இவர் ஆராய்ந்து வெளியிட்டவை- திருக்குறள், சிலம்பு போன்றவற்றின் திறனாய்வு. மற்றொன்று ஒரு பாட்டுக்கு ஒரு பேராய்வு செய்து வெளியிட்டவை—ஓவச் செய்தி, கொங்குதேர் வாழ்க்கை போன்றவை. மூன்றாவது தொகை நூல்களைத் தனித்தனியாக எடுத்துத் திறன் கண்டநிலை. நேற்று இந்தப் பாடல்களுள் பலவற்றை இவர் படைப்பிலக்கியங்களில் எடுத்துக் கையாண்ட தன்மைகளையும் முறைகளையும் கண்டோம். எதை எழுதினாலும் இவர் நூல்களில் திருக்குறள், சங்க இலக்கிய வாடை வீசுவதைப் பயில்வோர் நன்கு அறிவர். இந்த மூவகைப்பட்ட நிலையினையும் ஒன்றன்பின் ஒன்றாக எடுத்து ஆய்வதென்பது நம் கால எல்லையில் இயலாத ஒன்று. எனவே, ஒவ்வொரு வகைக்கும் ஒன்று அல்லது இரண்டு எடுத்துக் காட்டி அமையலாம் என எண்ணுகிறேன்.

'கொள்வோர் கொள்வகை அறிந்து அவர் உளங் கொளச் சொல்வதில்' வல்லவர் மு. வ. என்பதை நாடறியும். எனவே இவர்தம் திறனாய்வு நூல்களிலும் இந்தத்

தெளிந்த மரபினைக் காணமுடியும்.புரியாத தொடர்களுக்கு இவர் காணும் புது விளக்கங்களும், என்றோ எழுதிய அடிகளுக்கு என்றென்றும் பொருந்தும் உரைகளும்—தெளிந்த உரைகளும்—அவற்றால் உலகம் எவ்வெவ்வாறு பயன் பெறும் என்ற உணர்வு கலந்த எழுத்துக்களும் 'இவை வாழ்வில் தேவையா?' என்ற ஐயம் கொள்வார்க்கும் தேவைதான் என்று காட்டித் தெருட்டும் நல் விளக்கங்களும் உணர்ந்து உணர்ந்து இன்புறற்பாலன. ஈண்டு ஒரு சிலவற்றை நான் சுட்டி அமைகிறேன்.

இலக்கியங்களைத் திறன் கண்டு தெளிந்து விளக்கிய மரபினைக் காட்டுவதற்குமுன் அத்துறைபற்றி இவர் எழுதிய நூல்களை எண்ணிப் பார்த்தல் பொருத்தமானதாகும். இலக்கிய ஆராய்ச்சி, இலக்கியத்திறன், இலக்கிய மரபு என்ற மூன்று நூல்களும் இத்துறையில் எண்ணத்தக்கனவாம். இவற்றுள் முன்னது கலைக் கதிரில் தொடர்ந்து வெளியிட்டவற்றின் தொகுப்பு என்பது முன்னுரையால் தெரிகின்றது; முதலாவதாகவும் வெளிவந்தது. இந்த நூலினை எழுத இவர் பல மேலைநாட்டுப் புலவர்களைத் துணையாகக் கொண்டுள்ளனர் என்பது இவர் நூல்வழிச் செல்வார் அறிவர். முதற் கட்டுரையின் பெயரால் இந்நூல் அமையினும் பிற கட்டுரைகளும் இந்த அடிப்படையில் அமைகின்றமையின் நூல் முழுதுக்கும் இப்பெயர் பொருந்தும் என்பது தெளிவு.

### ஆராய்ச்சி

ஆராய்ச்சியில் மூவகை உண்டு என்பதைப் பல எடுத்துக்காட்டுகளோடு முதலில் இவர் விளக்குகிறார்.'வரலாற்று ஆராய்ச்சி, மொழியியல் அல்லது பகுத்தறியும் ஆராய்ச்சி—அனுபவ ஆராய்ச்சி என்பன அவை. இவற்றுள் 'இலக்கியத்தைப் பொறுத்தவரையில் அனுபவ ஆராய்ச்சி சிறந்து நிற்கும் காலமே அந்த நாட்டின் சிறந்த காலமாகும்' (பக். 8) என இவர் காட்டித் தம் இலக்கிய ஆராய்ச்சியைத் தொடங்குகிறார். இந்த இலக்கிய ஆராய்ச்சி செய்வோருக்கு இருக்க வேண்டிய சில பண்புகளையும் இவர் சுட்டுகிறார்.

"இலக்கிய ஆராய்ச்சியில் கருத்து வேற்றுமைக்கு இடம்தரும் பண்பாடு வேண்டும். ஒரு புலவரின் சிறப்பு என்று கருதுவதையே, புலவர் குறையென்று மற்றொருவர் கருதுமளவிற்கும் வேறுபாடு காணப் படும். இத்தனைக்கும் ஒரு நாடு இடங்கொடுத்தால் தான் அந்த நாடு இலக்கிய ஆராய்ச்சியில் சிறந்து விளங்கமுடியும். வேறு வழி இல்லை." (இல. ஆ. ப. 10)

"கபிலர், திருவள்ளுவர், இளங்கோவடிகள், கம்பர், பாரதி, வால்மீகி, காளிதாசர், ஷேக்ஸ்பியர், மில்டன், தாந்தே, புஷ்கின், தாகூர் முதலானவர்கள் காலம், சூழ் நிலை முதலிய வேறுபாடுகளைக் கடந்தவர்களாகத் தோன்றுகிறார்கள். ஆராய்ச்சியாளர்களும் அவர்களைப் போல் உயர்ந்தவர்களாக, உயர்ந்த உள்ளம் பெற்ற வர்களாக இருந்தால், அவர்களைவிட ஓரளவு ஒற் றுமை காணப்படும். அவர்கள் எழுதும் ஆராய்ச்சி நூல்களும் பொதுவான அனுபவத்தைக் கூறும் நூல் களாக இருக்கும். இந்த அளவிற்கு ஒற்றுமை போதும்; இதைக் காணும் திறன்தான் வேண்டும்." (பக். 11).

என்று இவர் எந்த உள்ளத்தோடும் உணர்வோடும் திற னாய்வாளர் இருக்கவேண்டும் என்பதைத் திட்டமாகச் சுட்டுகிறார். இலக்கிய ஆய்வாளர் என்ற பெயரோடு தங் களுக்கு வேண்டிய இலக்கியங்களைப் புகழ்ந்துகொண்டும்-அவற்றில் ஒன்றும் இல்லையெனினும் உயர்ந்ததென்று பாராட்டிக்கொண்டும் இருப்பதும் அதே வேளையில் எவ் வளவு சிறந்தவையாயினும் வேண்டாதவர்தம் இலக்கியங் களை என்றும் குறைகூறிக்கொண்டிருப்பதும் தமிழ்நாட் டில் சிலருடையவழக்கமாக இருந்துவந்ததைக்கண்ட இவர் அந்த மரபு விரும்பத்தக்கதன்று எனவும் ஆராய்ச்சியை அது கெடுக்கும் எனவும் காட்டத் தவறவில்லை. 'காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண் ஆய்தல் அறிவுடை யார்க் கண்ணதே' என்ற நிலையில் திறனாயும் அறிவுடை யார் இருக்க வேண்டுமென்பதே சட்டம். இந்த உண்மை

யைத் திறனாய்வு பற்றி நூல்கள் எழுதிய மேலைநாட்டு அறிஞர்கள் அனைவரும் திட்டமாக வற்புறுத்தியுள்ளனர். இந்த அடிப்படையில் இன்றி வேறு வகையில் திறனாய்வு அமையின் அது பயன்படாது கெட்டொழிவது ஒருதலை.

இந்த நூலில் இவர் நூல்களைப் பயிலவேண்டிய வகையினை 'அகல உழுதல், ஆழ உழுதல்' என்ற வகையில் விளக்கியதோடு நல்ல நூல்களைத் தேர்ந்து பயில வேண்டும் என்ற முறையினையும் சுட்டுகிறார்.

> "நல்ல நூல் என்பதுஎழுத்துச்சொற்பொருள்களான ஏடுகள் அடங்கிய ஒன்றன்று; நமக்குக் காட்சி அளித்துக் கருணை பொழிய என்றும் எங்கும் நமக்காகக் காத்திருக்கின்ற பெருந்தகையின் திருவுருவம் எனலாம்."

என்று நல்ல நூலைக் குறிப்பிட்டு இந்த நிலைக்குத் தமிழில் திருக்குறளையும் சிலப்பதிகாரத்தையும் குறிக்கின்றார். இந்த இரண்டு நூல்களையும் இவர் தனித்த முறையில் திறனாய்வு செய்து உலகுக்குத் தெளிவு தந்ததனை மேலே காணலாம்.

இந்த இலக்கியக் கலையின் திறன் உணர்வது எளிதன்று என்பதையும் உணர்ந்தால் பெறும் நிலை உயரியது என்பதையும் 'பர்னாட்ஷா', சி.ஈ.எம்.ஜோட், ஷெல்லி, ரெய்னால்ட்ஸ் ஆகிய மேலைநாட்டு அறிஞர்கள் வழி நின்று ஆராய்ந்து, தயக்கமில்லாமல் எதையும் சீர்தூக்கி உணரும் நிலையினைக் காட்டுகிறார். பழங்காலச் சங்கப் பலகையினை ஒட்டி, இந்த ஆய்வுச் சங்கப் பலகையில் இடம் கிடைப்பதற்கும் பொறுமை, முயற்சி முதலியன இன்றியமையாதது என்பதையும் சுட்டுகிறார். (ப. 44)

> நேர்மையான ஆராய்ச்சியில் தலைப்பட்டு, இலக்கியப் பூஞ்சோலையுள் நுழைந்து கலை வண்டாய்ப் பறந்து பல்வகை மணமும் நுகர்ந்த பிறகுதான் உண்மை விளங்கும்; 'உலகம் பலவகை' என்பது

உள்ளத்து உணர்ச்சியின் பலவகை வேறுபாடுகளைக் காட்டுவது போலவே, உணர்ச்சியின் கலைவடிவான இலக்கியமும் பலவகை, இலக்கிய ஆராய்ச்சியும் பல் வேறு வகை என்பதையும் விளக்கும்." (ப. 49)

என்று இவ்வாராய்ச்சியில் அமைந்த பல்வேறு வகையினை இவர் சுட்டுகிருர். ஆம்! இவரே இத்தகைய நெறிநின்று தம்மை மறந்து பல்வேறு வகையில் ஆராய்ச்சியில் ஈடுபட் டுள்ளார் என்பதை இவர்தம் நூல்களைப் பயின்ருர் நன்கு அறிவர். பெரிய இலக்கியங்களை இளைஞர், மாணவர் போன்ருேர் போற்றும் வகையிலும், பொதுமக்கள் போற் றும் வகையிலும் அதே வேளையில் அறிஞர்கள் சீர்தூக்கிப் பாராட்டும் வகையிலும் இலக்கியங்களின் திறம் கண்டு இவர் விளக்கியுள்ளார். அப்படியே இலக்கியங்களைப் பல்வேறு கோணங்களின் நின்று அவற்றின் தன்மை, தோன்றிய கால, இடச் சூழல்கள், பயன், பண்பு முதலிய வற்றையும் விளக்கிக் காட்டுகின்ருர்.

நல்ல நூல்கள் காலத்தை வென்று வாழ்வதற்கும் பல 'புற்றீசல்'களாய் உடனுக்குடன் மாய்வதற்கும் உரிய காரணங்களை ஆய்ந்து காட்டித் தம் நெஞ்சத்தைப் பண் படுத்திக்கொண்டு, உலகூட்டும் காவிரி போன்று தண்ணளி உடையவராய், இலக்கிய வளனை வழிவழியாக வருவோர் பெறுமாறு ஆற்றுப்படுத்தி, தன் கடமையைச் செய்துகொண்டு, நன்றி மறவாது வாழ்வார் நெஞ்சத்தில் ஊறிச் சுரக்கும் இலக்கியங்களே காலத்தை வென்று வாழும் எனக் காட்டுகிருர். (ப. 78-79)

பாட்டின் நிலைபற்றி இவர் சுட்டும் கருத்தினை இங்கே அப்படியே காட்ட விரும்புகிறேன்.

"பலவகைக் கட்டுப்பாடுகளிலிருந்து பாட்டு விடுதலைப் பெறப் பெற, பல்வேறு துறைகளில் உண் மைகளைப் புலப்படுத்தும் ஆற்றலையும் அது பெற்று வருகிறது. மற்றக் கலைகளுக்கு இல்லாத சிறப்பு இப்

பாட்டுக் கலைக்கு இருப்பது இதனால் ஆகும். மனிதன் வளர்ச்சியோடு மற்றக் கலைகள் போட்டியிட முடியவில்லை. ஆனால் பாட்டுக் கலையோ மனிதன் வளரும் அளவிற்குத் தானும் வளர்ந்து அவனுக்கு உற்ற துணையாக நிற்கின்றது. மனிதன் குழந்தை போன்ற உணர்ச்சி மிக்க நிலையிலிருந்து அறிவு நிலைக்கு வளர்ந்து வருகிறான். பாட்டும் அவனுக்கு ஏற்ப, உணர்ச்சியின் அடிப்படையின் உண்மைகளைப் புலப்படுத்த வல்லதாய் அமைந்துள்ளது. உணர்ச்சி நிலைக்கு மட்டும் பயன்படும் மற்றக் கலைகள் பின் ஏங்கி நிற்க, பாட்டுக் கலை அவற்றினின்றும் விடுதலை பெற்று மனிதனுக்குத் தோழனாய் முன்னேறுகிறது." (ப. 117-118)

என்ற வரிகளைப் படிக்கும்போது இம்மனித சமுதாயம் எப்படி இலக்கியமாகிய பாட்டுக் கலையோடு ஒன்றி விட்டது என்பது நன்கு புலப்படுகின்றதன்றோ?

இந்த இலக்கியத்துக்குப் பல எல்லைகள் வகுத்தும் சட்டங்களிட்டும் வரையறுக்கும் மனப்பான்மையை உயர்ந்த புலவர்கள் வெறுப்பது போன்றே சிலரும் வெறுத் தொதுக்குகிறார். இலக்கியத்தின் அகலத்தையும் நீளத்தையும் உயரத்தையும் அளந்து எக்காலத்திற்கும் உரிய விதிகளாக வற்புறுத்தல் தவறு எனக் காட்டிப் பிற்காலத்தில் பாட்டியல் இலக்கணம் இயற்றியவர் தவறான போக்கில் வழிகாட்டியதையும் கண்டிக்கிறார் (ப. 131).

வேண்டாதனவற்றை நீக்க வேண்டும் என்பதைத் திட்டமாக வற்புறுத்துவர் இவர். வாழ்க்கையில் வேண்டாதனவற்றை விலக்குமாறு நாவல்களில் சுட்டியபடியே மொழியிலும் இலக்கண மரபிலும் வேண்டாதன விலக்கப் பெறவேண்டும் என்பது இவர் கொள்கை.

"ஒரு காலத்தில் இன்றியமையாதனவாக இருந்த கஃறீது, முஃடீது, செய்கு, செய்கும். இலள், இலன்,

இலர் முதலிய சொற்கள் இன்று மொழிக்குச் சுமை யாகி விட்டன. ஆகவே இவற்றைப் பற்றிய இலக்கணப் பகுதிகள் வேண்டாதனவாகி விட்டன.'' (ப. 134)

''என்றுமே வேண்டாத இலக்கணப் பகுதிகள் சில உள. அவற்றைத் தண்டி அலங்காரத்திலும் மாறன் அலங்காரத்திலும் காணலாம். குவலயானந் தத்தில் கூறப்படும் சொல்லணிகள் முற்றிலும் வேண்டாதவை- சொல்லணிகள் கனவிலும் கருதத் தகாதவை'' (ப. 135)

என்பன போன்று வேண்டாத பலவற்றைத் திட்டமாக விளக்குகிறுர். ஈண்டு ஒன்றையே சுட்டிக் காட்டினேன்.

கவிஞர்களைப் பற்றி பிளேட்டோ (Plato-The Republic) என்பார் எழுதிய கருத்துக்களை விளக்கி ஆய்ந்து 'விட முடியாதது' என்ற தலைப்பில் இவர் எழுதியுள்ள கட்டுரை அக்கவிஞர்தம் போக்கு, தன்மை, புலமை,பண் பாடு முதலியவற்றை விளக்குவதாகும். கவிஞரிடத்தும் அவர்தம் கவிகளிடத்தும் குறைகாணுவோர் இருப்பினும் கூட, அந்தக் குறைகளையெல்லாம் கடந்து, அக்கவிகள் வாழ்வொடு பொருந்திய தொடர்பினை, உணர்ந்து அவற்றை வாழ்வுக்கு ஏற்ற வகையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டிய மக்களின் கடமையை இறுதியாகக் காட்டி அக்கட்டுரையை முடிக்கிறுர்.

இலக்கியம் காலந்தொறும் மாறும் தன்மையுடைய தென்பதையும் (171), அம்மாற்றத்துக்கான சூழ்நிலைகள் எத்தகையன என்பதையும் இலக்கியம் கற்பார் எந்த வகையில் தம்மை அந்த இலக்கியங்களுக்கு உரிமை யாக்கிக் கொள்ள வேண்டும் என்பதையும், நூல்களை ஆராயும் படிகளும் வகைகளும் எத்தகையன என்பதை யும் நூலின் இறுதிக் கட்டுரைகளில் சுட்டுகிறுர். எனவே இந்நூல் முழுதும் இலக்கியத்திறன் காணும் செறிவு

நிறைந்த கட்டுரைகளாய் அமைந்த ஒன்று என்பது தேற்றம்.

இலக்கியத் திறன், இலக்கிய மரபு என்ற இருநூல்கள் இலக்கியத்தின் பலவகைத் தன்மைகளையும் வேறுபாடு களையும் பிறவற்றையும் விளக்குவனவாகும். இரண்டும் பெரும்பாலும் முதுகலை பயிலும் மாணவர்களுக்கு இவர் பாடம் சொல்லிக் கொடுத்த அடிப்படையிலும் பல்கலைக் கழகச் சொற்பொழிவுகளாகவும், அமைந்தனவாகும். இலக்கியத் திறனாய்வு பற்றி மேலைநாட்டு அறிஞர்கள்– சிறப்பாக ஆபர்குரோம்பி, ஹட்சன், வின்செஸ்டர், ரிச்சர்ட்ஸ் போன்றோர் எழுதியுள்ள நூல்களின் அடிப்படை யில் இவர்கள் அந்த நாட்களில் பாடம் நடத்துவது வழக்கம். அந்த நூல்களை ஒட்டியும் அவற்றோடு சார்பான பிற நூல்களை ஒட்டியும் இவர்தம் இரு நூல்களும் அமைந் துள்ளன எனலாம்.

இலக்கியத்திறன் என்னும் நூலுள் அறிவியல், கலை என்ற இருவகைப் பகுப்பினையும் ஆராய்ந்து அவற்றின் வேறுபாடுகளை உணர்த்தி, கலையின் கூறான இலக்கியத் திறனைக் காட்டி, அதற்கு இன்றியமையாத தன்மைகளையும் பிறவற்றையும் விளக்குகிறார். மேலும் கலைகளின் பல்வேறு பிரிவுகளையும் அவற்றின் சிறப்பியல்புகளையும் அவை மக்கள் உள்ளங்களை ஈர்க்கும் நிலையில் பெற்றுள்ள அழகின் தோற்றத்தையும் அக்கலைகள் எதற்காக என்ப தையும் விளக்குவதோடு, அடுத்து அத்தகைய நல்ல கலைகளைப் படைப்பவர் யாவர் என்பதையும் தெளிவு படுத்துகிறார்.

> "கண்ணால் கண்ட பொருள்கள் அழகைப் பிறரும் காணுமாறு கற்பனையில் படைத்துக் காட்டல், செவி யால் கேட்டுப் பெற்ற ஒலி இன்பத்தைப் பிறரும் கேட்டு மகிழுமாறு கற்பனையில் படைத்து அளித்தல் முதலியவைகளே கலைஞர் தொழில்" (இலக்கியத் திறன் 37–38.)

"இரக்கம் மிகுந்தவர்களின் உள்ளமே எல்லா உணர்ச்சிகளும் கலைப்படைப்புக்கு ஏற்றவாறு அமைந்து விளங்கும் உள்ளமாகும்" (ப. 39)

என்றும் இன்னும் பலவகையிலும் மேலைநாட்டு அறிஞர்கள் கலையினைப் போற்றும் பண்பினை இவர் சுட்டிக் காட்டுகிறார். பின் இலக்கியம் என்பது என்ன என்பதையும் அந்த இலக்கியமும் கலையும் தோன்றுவதற்குக் காரணமானவை யாவை என்பதையும் விளக்கி, இலக்கியத்தில் உள்ள செய்யுள் உரைநடை இவைகளின் கூறுபாடுகளையும் பிறவற்றையும் அந்த மேலைநாட்டு அறிஞர்தம் வாய்மொழி கொண்டே விளக்குகிறார். இத்துறையில் தமிழில் இதுவரையில் திறனாய்வு நூல்கள் இல்லாத காரணத்தாலும் மேலைநாட்டு அறிஞர் இத்துறையில் பல வகையில் ஆராய்ச்சி செய்து முன்னேறியுள்ளமையினாலும் இத்திறனாய்வு பற்றிய விளக்கங்களை அவர்கள் அடி ஒற்றியே விளக்கிச் செல்லுகிறார். பாட்டின் தோற்றம், தொன்மை, வளர்ந்த நிலைகள் பிறவற்றை எடுத்துக்காட்டுகளுடன் விளக்கி அவை எவற்றின் நிலைக்களனாக - எந்தப் பொருள்களின் அடிப்படையாக – எந்தெந்த உணர்வின் திறப்படி தோன்றுகின்றன என்பதையும் விளக்குகிறார்.

அடுத்து, அப்பாட்டு தோன்றுதற்குக் காரணமாய உணர்ச்சி, கற்பனை ஆகியவைகளை விளக்கி அவை பெற்ற வடிவத்தினையும் தெளியக் காட்டுகின்றார். இவை அனைத்துக்கும் துணையாக நின்றவர்கள் வின்செஸ்டர் (C.T. Winchester) போன்ற மேலைநாட்டு ஆய்வாளர்கள் என்பதையும் இவர் சுட்டிக்காட்டத் தவறவில்லை. உணர்ச்சியைப் பற்றி இவர்,

"இலக்கியத்தின் உணர்ச்சி மூவரிடம் உள்ளது. மூவருடைய உணர்ச்சியும் ஒன்றுபடும்போது ஓர் இன்பம் உளதாகிறது. இலக்கியம் இயற்றிய புலவரின் உணர்ச்சி; அதில் வரும் கற்பனை மாந்தரின் உணர்ச்சி; அதைக் கற்பவர் பெறும் உணர்ச்சி ஆகிய மூன்றும்

உள்ளன. புலவரின் உணர்ச்சியைக் கற்பனை மாந்தரிடம் கண்டு அதையே கற்றவரும் உணர்தலே மூவகை உணர்ச்சியும் ஒன்றுதலாகும். தக்க வடிவம் தந்து தம்மால் வெளிப்படுத்த முடியாத உணர்ச்சியை இலக்கியத்தில் தக்க வடிவத்தில் காணும்போது, உள்ளம் விரிவடைந்து மகிழ்தல் இயல்பாகும்." (ப. 77)

என்கின்றார். கற்பனையினைக் காட்ட நினைக்கும் இவர்,

"உள்ளம் விரும்புமாறு அமையும் கற்பனைக்கும் வாழ்க்கையே அடிப்படையாகும்...வாழ்க்கை பலர்க்கும் பலவகை அனுபவங்களைத் தருவதாக இருந்த போதிலும், கலைஞர்களே அவற்றைக் கற்பனைச் செல்வங்களாக உணர்ந்து நுகரும் பேறு பெறுகிறார்கள்". (ப. 134)

என்றும் இன்னும் பலவகையிலும் விளக்குகிறார். மேலும் கற்பனையில் அமையும் பல்வேறு வகைகளையும் தெள்ளத் தெளியக் காட்டுகிறார். பின்பு வடிவம்பற்றிய தனிப்பகுதியில் இலக்கியம் பெற்ற பல்வகை வடிவத்தினையும் பரப்பின் வளர்ச்சியையும் தமிழ் யாப்பியல் வழிநின்று தெளிவு படுத்துகிறார். பின் உவமம், உருவகம் போன்ற அணிகள் இலக்கியத்துக்கு அணி செய்வதையும் நடைவழி இலக்கியம் சிறப்படைவதையும் சுட்டிக் காட்டுகிறார். சிலர் புரியாத நடையில் எழுதிவிட்டு அதை உயர்நடை எனக் கொள்ளுவதை இவர் கண்டிக்கத் தவறவில்லை. அதை வேண்டுமாயின் கடுநடை என்று கொள்ளலாமே ஒழிய உயர்நடை என்று கொள்ளலாகாது எனத் திட்டவட்டமாகக் கூறுகிறார். (ப. 243)

இவையனைத்தும் காட்டி, இவைகளுக்கு எல்லாம் மேலாக இலக்கியம், உணர்த்தும் ஆற்றல் பெற்றதாக வேண்டும் என்பதை நன்கு விளக்குகிறார். இதற்கு ஆபர்குரோம்பி போன்ற பேரறிஞர்களின் சொற்களை

அப்படியே மொழிபெயர்த்து எடுத்தாளுகிருர்.(ப.242-467)

இவர் மேலைநாட்டுப் புலவர்தம் கருத்துக்களை எடுத்தாளும்போது, அவற்றை மொழிபெயர்த்து எழுதி இன்ஞர் கூறுகிருர் என்ற குறிப்புடன் அமையாது, அந்தந்தப் பக்கத்திலேயே மூலத்தை ஆங்கிலத்திலேயே குறித்து (நூல், பக்க எண் உட்பட), அவற்றைத் தம் கையாண்டதைச் சுட்டிக் காட்டுவார். ஆய்வாளர் சிலர் இவ்வாறு செய்வது இல்லை என்பதைத் தமிழுலகம் நன்கு அறியும். சிலர் அவற்றைத் தாமே கண்டது போலவும் கூறுவர்; சிலர் அப்படிக் காட்ட நேரினும் 'என்று இன்ஞர் கூறியுள்ளார்' என்று பக்க எண் மட்டும் சில இடங்களில் சுட்டியும் செல்வர். ஆயினும் மு. வ. அவர்கள் ஆங்கில மூலங்களை அப்படி அப்படியே—அந்தந்தப் பக்கங்களிலேயே அடிக்குறிப்பாக இட்டுச் செல்வது இவர் நேர்மைக்கும் பண்பிற்கும் சிறந்த எடுத்துக்காட்டாகும். உணர்த்தும் திறனை வற்புறுத்துவது போன்றே, அந்த நூல்களைப் பயில்வார் நுகரும் தகுதியும் பெறவேண்டும் என்பதையும் இவர் சுட்டிக்காட்டத் தவறவில்லை. நுகரும் வகையில் பெறும் பல நிலைகளையும் சொல் வகையிலும்நுகரும்உணர்ச்சி நிலைகளையும், அவற்றை ஏற்கும் மனநிலையினையும் சுட்டுகிருர். கடைசியாக 'ஆராய்ச்சி' என்ற தலைப்பிலே இந்தத் திறஞய்வு முறை அமையவேண்டிய அடிப்படைத் தன்மைகளையும் அதனேடு தொடர்பான பிறவற்றையும் விளக்குகிருர். முடிவாக,

> "இலக்கிய ஆராய்ச்சி இருவகையில் பயன் விளைக்கிறது. ஒன்று இலக்கியத்தை அது நன்கு விளக்குகிறது; மற்ருென்று, இலக்கியத்தில் சிறந்தது, சிறப்பற்றது என்று தேர்ந்து அறிவிக்கிறது. ஆகவே கற்கும் இலக்கியத்தை நன்ருகக் கற்கவும் தக்கதைக் கொண்டு தகாததைக் கைவிடவும் அது உதவியாகிறது." (ப. 331)

என்றும், இலக்கிய ஆராய்ச்சியாளார் இருக்க வேண்டிய நிலையை,

"மக்கள் உடனே உணர்ச்சி வயப்பட்டுப் புலப் படுத்தும் போற்றுதலையோ தூற்றுதலையோ நாடாமல், காலம் கடந்து விளங்க வல்ல உண்மையை மட்டும் நாடவேண்டும்!" (ப. 332) என்றும் காட்டுகிறார்.

"இலக்கிய ஆராய்ச்சியாளர்கள் தகாதவற்றைக் கற்றுக் காலத்தை வீணாக்காதவாறு கற்கத் தக்கவை இன்னவை என்று எடுத்துரைக்க வல்லவர்கள்" என்ப தையும்,

"முறையின்றிக் கற்றுப் பயன்பெறாமல் திகைக் காதவாறு இவ்விவ்வாறு கற்று இன்ன இன்ன பயன் பெறுக என எடுத்துரைக்க வல்லவர்கள்" (ப. 336)

என்பதையும் காட்டியுள்ளார் டாக்டர் மு. வ. அவர்கள் அந்த நெறிநின்று தம் இலக்கியத் திறனாய்வினைச் செய் தார் என்பதைத் தமிழுலகம் நன்கு அறியும்.

இனி,இவர் எழுதிய மற்றொரு நூலாகிய இலக்கியமரபு என்பது, இலக்கியத்தின் தோற்ற மரபு நிலையினையும் பல்வேறு வகைகளையும் விளக்குகின்றது. இவர்தம் முன் னுரையிலேயே இதைத் திட்டமாகக் கூறுகிறார்.

"வாழ்வு மரபுடையது, இலக்கியம் வாழ்விலி ருந்து மலர்ந்தது. ஆதலின் அதுவும் மரபுடையது. இலக்கியம் நுகர்வோர்க்கு மரபு பற்றிய அறிவு இன்று யமையாதது. இலக்கியம் ஆராய்வோர்க்கும் இந்த அறிவு இன்றியமையாதது.

இலக்கியம் பலவகை. தமிழில் தொன்றுதொட்டு அமைந்த இலக்கிய வகைகளும் உண்டு. இன்றுபுதிய னவாய் அமைந்த இலக்கிய வகைகளும் உண்டு. அவற்றில் அமைந்துள்ள மரபுகளை ஆராய்ந்து கூறு வதே இந் நூலின் நோக்கமாகும்."

என்ற முன்னுரையொடுதான் இந் நூலை இவர் தொடங்கு கின்றார், இதில் பாகுபாடு பற்றி முதலில் கூறி, பின்

பல்வேறு வகைப்பட்ட இலக்கியங்களையும் காவியம், நாடகம், நாவல், சிறுகதை ஆகிய பகுதிகளில் அடக்கிக காட்டி, இறுதியாக 'மரபு' பற்றிய விளக்கத்தினையும் தந்துள்ளார்.

தொல்காப்பியனர் காலந் தொடங்கி இன்று வரை வளர்ந்துள்ள இலக்கியங்களைப் பாகுபடுத்திக் காட்டி தமிழில் வளர்ந்துள்ள இலக்கிய நெறியினை இதில் சுட்டு கிருர். அவற்றுள் அமைந்த அகம் புற வேறுபாடு, ஐந்திணை அமைப்பு போன்றவற்றையும் சுட்டிக் காட்டியே பிறகு பாகுபாட்டை உணர்த்துகிருர். அவ்வாறே பிற மொழிகளில் அமைந்த பாகுபாடுகளையும் சுட்டுகிருர். பின் ஒவ்வொன்ருகக் காவியம், நாடகம், நாவல், சிறுகதை ஆகியவற்றின் தன்மை, அமைப்பு, வகை, வரலாறு முதலி யவற்றைத் தெள்ளத் தெளியக் காட்டிக் கடைசியில் மரபு பற்றிச் சுட்டுகிருர்.

> "மனிதன் படைக்கும் இலக்கியமும். காலத்திற்கு ஏற்பப் புதிய வடிவங்களைப் பெற்றபோதிலும், பழைய இலக்கியங்களின் தொடர்பையும் அடிப்படையையும் விடுவதில்லை. அவற்றையே இலக்கிய மரபு என்று கூறுதல் வழக்கம்" (பக். 173)

> "பழைய மரபுகள் ஒரளவு இருந்துவர, புதிய இலக்கியங்கள் அந்த மரபுகளை ஒட்டியும் ஒட்டா மலும் காலத்துக்கு ஏற்ப அமைந்து வருதல் உண்டு" (பக். 174)

என்று பொதுவாக அமையும் இலக்கிய மரபினைச் சுட்டிக் காட்டிய இவர், பின்பு இடம், காலம், சூழல், தன்மை இன்ன பிறவற்றின் அடிப்படையில் அமைந்த மரபுகளை யும் தொடர்ந்து விளக்கிக் கொண்டே செல்கிருர். பின் னணி,பொருள் பற்றிய மரபுகள், வடிவம் பற்றிய மரபுகள் என்று மரபுவழி அமைவனவற்றையும் பிறவற்றினையும் தொடர்ந்து விளக்கும் இவர் கடைசியாக இம் மரபு நெறி

நின்று காலந்தொறும் வளர்ந்துவரும் இலக்கியம் மாற்றத்துக் குரியது என்றும் அம் மரபு கெடாத மாற்றத்தை மதித்துப் போற்றவேண்டும் எனவும் குறிப்பர்.

> "இலக்கியம் உயிரினங்களைப் போல் தோற்றமும் வளர்ச்சியும் வாழ்வும் உடையது. ஆகவே இவ்வாறு இருத்தல்தான் என்பது இலக்கியத்தின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் பொருந்தாத தடையாகும். தொடக்கத்தி லிருந்து வளர்ந்து மாறிவரும் இலக்கியம் இனியும் அவ்வாறே வளர்ச்சி பெறக்கூடியது என்று மதித்துப் போற்றுவதே கடமையாகும்" (பக். 201)

என்று மரபுவழிக் கெடாத மாற்றங்கள் காலந்தெறும் நடைபெறுவதை இவர் வரவேற்கிறுர்.

எனவே காலந்தொறும் மாறிவரும் நிலையில் இலக்கியம் வளர்ச்சியடைந்து வருவது தேவை என்பதும் அம் மாற்றம் அடிப்படைத்தன்மை கெடாதவகையில் அமைய வேண்டும் என்பதும் தேற்றம். எனவேதான் இந்த நூலிலும் சங்ககாலம் தொட்டுப் பாரதி, பாரதிதாசன் காலம் வரையில் வளர்ந்த இலக்கியங்களை இவர் எடுத்துக்காட்டி விளக்கமும் தந்துள்ளார். இந்த வகையில் மரபு மட்டு மன்றிப்பிற வரலாறுகளையும் உள்ளடக்கியதே இவர் எழுதிய சாகித்திய அகாத வெளியிட்ட தமிழ் இலக்கிய வரலாறு என்னும் நூலாகும்.

## தமிழ் இலக்கிய வரலாறு

தமிழ் இலக்கிய வரலாறு என்னும் இந்நூல் சாகித்திய அகாதமியின் திட்டபடி எழுதப்பெற்றது. மற்றை இந்திய மொழிகளிலும் மொழி பெயர்க்கப் பெறுவது. நாட்டின் ஒற்றுமை உணர்ச்சிக்கு உகந்ததாக இத்தகைய பணியினை மேற்கொண்டதாக பதிப்பாளர் குறிப்புரை அறிவிக்கின்றது.எனவே இந்நூல் இந்திய மொழிகள் அனைத்திலும் மொழி பெயர்க்கப் பெற்று, தமிழ் இலக்கிய வரலாற்றை

விளக்கிக் கொண்டிருக்கும். இவருடைய பெற்ற மனம், அகல்விளக்கு, விடுதலையா, மனச்சான்று, கயமை, குறட்டை ஒலி, காதல் எங்கே என்பன ஆங்கிலமொழியிலும், அகல்விளகது குறட்டை ஒலி இரண்டும் ரஷ்ய மொழியிலும், கள்ளோ காவியமோ சிங்கள மொழியிலும், கரித்துண்டு இந்தி மொழியிலும், இளங்கோவடிகள் தெலுங்கு, மலையாளம் முதலிய மொழிகளிலும் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன. எனவே இவரது இத் தமிழ் இலக்கிய வரலாறு பிறமொழிகளில் மொழி பெயர்க்கு முன்னரே வேறு சில நூல்கள் இந்திய நாட்டுப் பிற மொழி களில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளமையின், இவர் தமிழ் நாட்டுக்கு மட்டுமன்றிப் பரந்த பாரத நாட்டுக்கும் உலகுக்கும் உரியவரானுர். இந்த நூலின் முன்னுரையில் இவர் இந்த நூல் எழுதுவதற்குப் பெற்ற தகுதிகளைத் திரு. தெ. பொ, மீனுட்சிசுந்தரனுர் பின்வருமாறு குறிக்கிருர்.

> "தமிழிலக்கிய வரலாற்றை எழுதும் பணியைத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனுரிடம் சாகித்திய அகாதெமி ஒப்படைத்தது. இவர் ஆழ்ந்த புலமை பெற்றவர். தமிழிலக்கியத்தின் அடிப்படைக் கருத்துகளை மாணவர்களுக்கும் பொதுமக்களுக்கும் எளிதில் விளக்கும் பேராசிரியர் எனப் பேர் பெற்றுள் ளார். படைப்பாற்றல் பெற்ற எழுத்தாளர். தம்முடைய நாவலுக்குச் சாகித்திய அக்காதெமியின் பரிசையும் பெற்றவர். தமிழில் உள்ள முற்கால இடைக்கால தற்கால இலக்கியங்களில் ஒருசேரத் திளைக்கும் சிலரில் இவரும் ஒருவர். தமக்கே உரிய ஒப்பற்ற முறையில் தமிழ் இலக்கிய வரலாற்றை விளக்கி யுள்ளார். மதிப்பதற்கரிய காணிக்கையாக இது விளங்குகிறது"

என்று திரு. தெ. பெ. மீ. அவர்களே போற்றும் போது வேறு நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? இந்நூலில் மு. வ. அவர்கள் தமிழ் மொழியின் தொன்மையினையும் திராவிட மொழி பரவியிருந்த பான்மையினையும் காட்டி

தமிழில் அன்றுதொட்டு வளர்ந்துள்ள இலக்கியங்களை ஒன்றன்பின் ஒன்ருக வரிசை இட்டுக் காட்டுகிருர். சங்க காலத்துக்கு முற்பட்ட இலக்கியங்கள் தொடங்கி இன்றைய இலக்கியங்கள் வரையில் (என்னுடையவற்றையும் சேர்த்து) தமிழ் இலக்கிய வரலாறு வளர்ந்த வகையினைத் தெள்ளத் தெளியக் காட்டுகிருர். பழங்காலம் (கி. மு. 500 முதல் கி. பி. 600 வரை) எனவும், இடைக்காலம் (கி.பி. 600 முதல் 1800 வரை) எனவும், பிற்காலம் (கி. பி. 1800க்குப் பின்) எனவும் காலத்தை மூன்று கூறுகளாக்கி அவ்வக் காலங்களின் இலக்கியங்களையும் மேலும் காலத்தை ஒட்டி ஒன்பதாகப் பாகுபடுத்தி (3+4+2) அவ்வக் காலத்துச் சூழல் முதலியவற்றையும் சமுதாய வாழ்வினை ஒட்டியும் அவை வளர்ந்த வகையில் சுட்டிக் காட்டுவது ஒரு தெளிந்த ஒளிக் காட்சியாகும். இது வரலாருக உள்ளமை யின்—அதிலும் அரசாங்கச் சார்பு பெற்ற சாகித்திய அகாதமியின் வாயிலாக வந்த நூலானமையின்—தம் சொந்தக் கருத்துக்களையோ கொள்கைகளையோ அன்றித் தம்மால் போற்றப்படுவர்தம் சொற்பொருள் விளக்கங் களையோ பிற கருத்துக்களையோ விளக்காது நேரிய வழி யில் எடுத்துக்கொண்ட பொருளை மட்டும் விளக்கிச் செல்லுகின்ருர் என்பதை நோக்க வேண்டும். இவர்தம் முன்னுரையோ வேறு கருத்து விளக்கங்களோகூட இல்லை என்பதும் கண்கூடு. இந்தத்துறையில் இதற்கு முன்பே சில நூல்கள் வந்துள்ளன என்ருலும் அனைத்தையும் தொகுத்து அன்றுதொட்டு இன்று வரை வரையறுத்த எல்லையில் நின்று இத்தகைய முறைப்படுத்திய வரலாறு இதற்குமுன் வரவில்லை எனலாம்.

இந்நூல் பற்றிய பதிப்பாளர் குறிப்பில் கூறியபடி 'பொதுவாக தமிழிலக்கிய வளர்ச்சி பற்றி அறியவிரும்பு வோருக்கு இந்நூல் பயன்படுவதாகும்' என்பதை உணர்தல் வேண்டும். ''இத்தனைப் பக்கங்கள் அமைய வேண்டும் என்ற வரையறை காரணமாக, எல்லா நூல் களுக்கும் நூலாசிரியர்களுக்கும் போதுமான விளக்கங்கள்

தர இயலாவிட்டாலும், இலக்கிய வளர்ச்சியில் காணப் படும் மாறுதல்களும் புதுப் போக்குகளும் சிறப்பியல்பு களும் ஆங்காங்கே தெளிவாகச் சுட்டிக் காட்டப்பட்டுள் ளன," என்ற பதிப்பாளர் தம் குறிப்பும் எண்ணத்தக்க தாக உள்ளது. இந்த மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக இருந்த காலத்தில் இவர் எழுதிய பெருநூல்— வெளியிடப் பெற்ற பெருநூல் இது என்பதால் இத்தகைய உயர்பெருமை இப்பல்கலைக் கழகத்தைச் சாரும் என்பது தெளிவு.

## வள்ளுவார் உள்ளம்

இனி இவர் திறனுய்ந்த நூல்களைப் பற்றி எண்ணு வோம். தனி நூலாகிய பெரு நூலாம் திருக்குறளை எடுத் தாய்ந்து 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' எனப் பெயரிட்டு வெளியிட்ட நூல் மிக உயர்ந்த ஒன்ருகப் போற்றப் பெறுகின்றது. இதன் சிறப்பினை நான் கூறுவதை விட திரு. வி. க. அவர்கள் எழுத்தின் வழியே காணுதல் பொருத்தமானதாகும். இந்நூலுக்கு முன்னுரை எழுதிய திரு. வி. க. அவர்கள் கூறிய கருத்துக்களுள் சிற வற்றைக் கீழே தருகிறேன்:

> "உலகம் ஒரு குலம் என்பது பழந்தமிழர் பண் பாட்டினின்றும் முகிழ்த்த ஒரு பெருங் குறிக்கோள். அக்குறிக்கோள் திருவள்ளுவருள் படிந்து நின்று வளர்ந்து ஒரு சீரிய உலக நூலாயிற்று."

> "திருக்குறள் ஒரு சுரங்கம். அஃது அவ்வக்கால உலகைப் புரக்கும் பொருள்களை அவ்வப்போது வழங்கும் பெற்றியது. அதினின்றும் இதுகாறும் அறிஞர் களால் எடுக்கப்பட்ட பொருள் சிலவே; மிகச்சிலவே. இவ்வேளையில் திரண்டுவரும் புது உலகமும், இனித் திரளப்போகும் பலவகை உலகங்களும் ஏற்கத்தக்க பொருள்கள் இன்னும் திருக்குறளில் மிடைந்து கிடக் கின்றன. திருக்குறட் சுரங்கம் வற்ருதது.

"திருக்குறளைப் பற்றிய ஆராய்ச்சிகள் புதுமைப் போர்வையில் இனி வெளிவருவது நல்லது. இப்பொழுது ஒன்று வெளிவந்துள்ளது. அது 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' என்னும் இந்நூல். இதிலே புது உலக மணம் கமழ்கின்றது.

"இத்தகைய நூலை யாத்தவர் டாக்டர் மு. வரதராசனுர், எம். ஓ. எல். ஆசிரியர் வரதராசனுரை யான் நீண்ட காலமாக அறிவேன். ஆசிரியர் வரதராசனுர் பெருங்கலைஞராய் நாட்டை நல்வழியில் ஓம்பும் தொண்டராவர் என்று யான் நினைத்ததுண்டு. அந் நினைவு பழுதுபடவில்லை. அவர் இயற்றியுள்ள நூல்கள் நாட்டை நல்ல வழியில் ஓம்பிவருதல் கண்கூடு."

"தோழர் வரதராசனுர் ஒரு கலைக் கழகம்; பொறுமைக்கு உறையுள்; அமைதிக்கு நிலைக்களன். புரட்சி அவர் நெஞ்சில் பொங்குகிறது; வாயில் வழிகிறது; கையில் நிகழ்கிறது. தோழர் புரட்சியை இந்நூலில் பரக்கக் காணலாம்."

"திருக்குறள் பால்வைப்பைப் பார்ப்போம். அஃது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று வைப்பைப் பெற்றிருக்கிறது.

"இவ்வமைப்பைத் தலை கீழாக்குகிருர் வரதராசனுர். புது உலக மக்களுக்குத் திருக்குறள் ஆராய்ச்சித் துறைகளை எளிமையாக்குதல் வேண்டுமென்பது அவர் கருத்துப் போலும். நூலின் தோற்றுவாயிலேயே புரட்சி வீசுகிறது புரட்சி, நூல் நெடுகப் புகுந்துள்ளது."

"இந் நூலிடை ஆசிரியர் புரட்சி செய்துள்ளார். அப் புரட்சியின் அடியில் அறம் செறிகிறது. மூர்க்கம்

அலறவில்லை. அறப்புரட்சி திருக்குறள் நலத்துக்குத் துணைபோவது.

"திருக்குறள் அதிகாரங்களிற் பலப்பல இந் நூலுள் புரட்சிபெற்றிருக்கின்றன. புரட்சி புது உலகை அமைத்தே தீரும். இந் நூற்கண் பலவிடங்களில் பொதுமையும் மனத்தூய்மையும் மிளிர்கின்றன. இரண்டும் நூலின் நுரையீரல்கள் என்று கூறல் மிகையாகாது. இவை 'ஒரு உலகம் ஒரு குலம்' என்னும் உயிர்ப்பை இயக்குவன."

"இந்நூல் ஒரு நன்னூல்; புதுமைப் பொதுநூல்; உலகம் ஒருகுலமாகச் செய்யும் துணை நூல், இதனை உதவிய ஆசிரியர் வரதராசனுர் வாழ்க."

என்று திரு வி.க. அவர்கள் கூறியுள்ளார்கள். அவர்கள் கூறிய கருத்துக்களுள் சிலவற்றையே இங்கே நான் குறித்துள்ளேன். அவருடைய அணிந்துறை பதினெட்டுப் பக்கங்களுக்கு நீண்டதாகும். திருக்குறளைத் திறனுய்வு செய்த இவர் நூலைத் திறனுய்வு செய்திருக்கிருர் திரு வி. க. இவ்வாறு இவர் வழியே தக்கவர்களால் தமிழில் திறனுய்வுக் கலை வளர வாய்ப்பு உண்டாயிற்று. இந்த அணிந்துரைத் திறனுய்வில் திரு வி. க. அவர்கள் இந்த நூல்மட்டுமின்றி, திருக்குறளையே திறனுய்வு செய்கின்ருர். மேலும் மு. வ. அவர்கள் எழுதிய நூல்கள் பலவற்றையும் இன்று பலர் இவ்வாறே திறனுய்வு செய்கின்றனர். எனவே இவர் திறனுய்வு பற்றிய நூல்களை எழுதித் தாமே தமிழ் நூல்கள் பலவற்றையும் ஆய்ந்து அவற்றின் திறனறிந்து போற்றி நூல்கள் வெளியிட்டதோடன்றி, வழி வழி வரும் மக்களும் இத் திறனுய்வுக் கலையில் சிறக்க வழிகாட்டியுள்ளார் என்பது தெளிவு.

இனி, இவர்தம் 'திருக்குறள் அல்லது வாழ்க்கை விளக்கத்' தில் இவர் திரு. வி. க. காட்டியபடி என்ன புரட்சி செய்துள்ளார் எனக் காணல் நலம். திருக்குறளின் கருத்

துக்கள் எந்தக் காலத்துக்கும் ஏற்புடையனவாகும் என்ற உண்மையை மு. வ. அவர்கள் பலவகையில் விளக்கி, இந்த நூற்றுண்டில் வாழும் நம் வாழ்வில் அது விளங்கப் பெறுவதையும் விளங்க வேண்டுவதையும் சுட்டுகிறர். இவர் ஆய்ந்த முறைகளையும் காட்டிய விளக்கங்களை யும் எண்ணிப்பார்த்தல் என்பது இயலாது. எனினும் சில வற்றைக் காட்டல் என் கடமையாகும். அதிலும் நான் புதி தாகக் காட்டாமல் திரு வி. க. அவர்கள் எடுத்துக் காட் டியவற்றுள் சிலவற்றையே ஈண்டு குறிக்க நினைக்கிறேன். இதோ மு. வ. அவர்கள் கூறியவை:

"ஆண் பெண் இருவரின் இருவேறு மனங்கள் ஒன்று மற்றென்றில் கரைந்துபோகும் தன்மையைக் காமத்துப்பால் கூறுகின்றது; கணவனும் மனைவியு மாகிய இருவர் ஒருமனம் உடையவராய் உலக நன்மை கருதி வாழும் தன்மையை இல்லறம் காட்டுகிறது."

"அக்காலத்தில் வாழ்க்கைப்போர் பொதுவாக இருந்தது; உலகத்திற்குப் பொதுவாகப் பெய்யும் மழையே காரணமாக இருந்தது; இக்காலத்து வாழ்க் கைப்போர் பெரும்பான்மையான மக்களுடையதாக இருந்தாலும் தனித்தனியாக அமைந்திருக்கின்றது. சிலரிடையே குவியும் பணம் காரணமாக இருக்கின்றது."

"உலகத்தில் உள்ள விபசாரத்தில் பெரும்பங்கு பொருளுடையவரின் மயக்க வலையில் பொருளில்லாத வறியர் வீழ்ந்து அகப்பட்டுக்கொள்வதால் நிகழ்வ தாகும்...வறுமையின் நெருக்கடி தாளமுடியாமல் பலர் ஒழுக்கக்கேட்டிற்கு ஆளாகின்றார்கள்."

"இயற்கையில் கடவுள் தன்மையைக் கண்டு போற்றுவது உயர்ந்த நெறி. இயற்கையில் அமைந் துள்ள பலவற்றிலும் மழை மிகச் சிறந்தது. உலக

வாழ்க்கை இடையருமல் நடக்கவேண்டிய வகையில் இயற்கையை இயக்கிவரும் ஒரு பெரிய சக்தியை நினைந்து உருகுவதற்கு இது காரணமாக உள்ளது,"

இவை போன்ற எத்தனையோ இடங்கள் உள்ளத்தைத் தொடுவனவாக உள்ளன. பல சொற்களுக்கும் சொற்றெடர்களுக்கும் இவர் காணும் விளக்கங்கள் எண்ணி எண்ணி நோக்கத்தக்கன. இந்த ஒரு நூல் பற்றியே எத்தனை நாட்கள் வேண்டுமாயினும் பேசலாம். ஆயினும் இந்த அளவோடு ஈண்டு அமைகின்றேன். அனைவரும் இந்த நூலை ஒருமுறையாவது ஊன்றிப் பயிலவேண்டும் என்பது என் வேண்டுகோள். (இந்நூல் இப்போது கிடைக்காவிடினும் விரைவில் அச்சிட்டு வெளிக்கொணர ஏற்பாடுகள் நடக்கின்றன என அறிகிறேன்.)

## இளங்கோவின் படைப்பு

இனி, இவர் திறனய்ந்து தெளிந்த மற்றெரு நூலாகிய சிலப்பதிகாரத்தைப் பற்றி ஒருசில காணலாம். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தே மறைந்த சேதுப்பிள்ளை அவர்களால் அவர்தம் அன்னையார் சொர்ணம்பாள் நினைவாக அமைந்த சொற்பொழிவுகளே இளங்கோவடிகள் என்ற பெயரால் அமைந்துள்ள நூல். இதே சொர்ணம்பாள் நினைவுச் சொற்பொழிவினை ஆற்றுமாறு அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தார் என்னை அழைத்தபோது அங்கே தமிழ்த்துறைத் தலைவராய்ப் பணியாற்றிய அருமை நண்பர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் என்னைச் 'சாத்தனர்' பற்றிப் பேசுமாறு சொன்னர்கள். 'டாக்டர் மு. வ. அவர்கள் இளங்கோவடிகளைப் பற்றிப் பேசிவிட்டார். எனவே இரட்டைக் காப்பியத்தின் மற்றெரு கூருகிய மணிமேகலையைப்பற்றி நீங்கள்தான் பேசவேண்டும்' எனக் கூறியபோது உண்மையிலேயே இவர் அடியொற்றி வாழும் எனக்கு வியப்பாகவும் விருப்பாகவும் இருந்தது. அப்படியே 'சாத்தனர்' பற்றிப் பேசினேன். இது வன்றி இக்காப்பியத்துள் வரும் மாதவி

கண்ணகி என்ற இரண்டு பாத்திரங்களைப் பற்றியும் தனித் தனியாக ஆராய்ந்து வெவ்வேறு நூல்களையும் வெளியிட்டுள்ளார் டாக்டர் மு. வ.

இந்நூலில் இளங்கோவடிகள் காலத்தை நிறுவிய இவர் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் கூறிய 'சிலப்பதிகாரம் திருஞான சம்பந்தரின் காலத்திற்குப் பிந்தியதாக இருக்க வேண்டும்' என்ற கூற்றை மறுப்பதில் காட்டுகின்ற பண்பாடு (ப. 11-14), கொள்கை மாறுபாடு கொண்டுள்ள அனைவருக்கும் இருக்கவேண்டிய ஒன்றாகும். அப்படியே வேறு சிலர் கருத்துக்களை எடுத்துக் காட்டி, இவர் மறுக்கும் திறனும் பண்பும் வியக்கத்தக்கன. ஒரு தருக்க ஆசிரியருக்கு அமைய வேண்டிய பண்புகளோடு தம் கொள்கையினை அமைதியாகக் காட்டும் திறனும் இவரிடம் காண இயலும்.

இளங்கோவடிகள் உள்ளத்தை நூல்வழி ஆராய்ந்த இவர் அவர்தம் ஒற்றுமை நோக்கினைப் பற்றிப் பலவிடங்களில் சுட்டுகிறார்.

> "ஆட்சியால் தமிழகம் மூன்றுகப் பிரிவுற்றிருந்த போதிலும், பண்பாட்டால், மொழிவகையால் தமிழர் என்று ஓர் இனம் வாழும் நாடே என்ற கொள்கையை வலியுறுத்த முயன்றார் அவர். அதனால் முடியுடை வேந்தர் மூவர்க்கும் உரிய ஒரு காவியத்தைத் தமிழகத்தின் பொதுக் காவியமாகவே ஆக்கித் தந்துள்ளார். ஒரு வேந்தனை மற்றொரு வேந்தன் வெறுக்காத வகையிலும் வெறுப்புத் தோன்றினாலும் மாறித் திருத்தும் வகையிலும் பல நிகழ்ச்சிகள் அமைத்துத் தமிழகத்தின் ஒற்றுமைக்குக் கால்கோள் இட்ட தமிழ்ச் சான்றோர் இளங்கோவடிகள் ஆவர்" (ப. 30-31)

என்று அவர் ஒற்றுமை உள்ளத்தைக் காண வைக்கிறார். இந்த நிலையிலேயே இவர் உள்ளம் உலகைத் தாவிக் காண்கின்றது. இளங்கோவடிகள் மட்டுமன்றி உலகத்துச்

சிறந்த கவிஞர்கள் அனைவருமே இந்த மரபினைச் சேர்ந்தவர்களே என்ற உண்மையையும் உணர்த்துகிறார்.

"உலகத்துப் புலவர் பெருமக்களெல்லாம் ஓர் இனத்தார். இளங்கோ, காளிதாசர், ஹோமர், கம்பர் ஷேக்ஸ்பியர், கதே முதலான எல்லோரும் ஓரினம். அவர்களிடையே சாதி முதலிய பிரிவுகள் இல்லை. சமயம் முதலியவற்றால் ஏற்படும் வேறுபாடுகளைக் கடந்தவர்கள். அவர்கள் நாடு வெவ்வேறு. அறிவியல் முன்னேற்றத்தால் உலகம் ஒரு சிறுநாடுபோல் கருதப்படுவதற்கு முன்பே உலகத்தை ஒரு குடும்பமாகக் கண்டவர்கள் அவர்கள்." (ப. 32)

என்று ஒரே உலகக் கொள்கை இவர் உள்ளத்து எழ இவரும் அப்புலவர் வரிசையில் வைத்து எண்ணத்தக்க புகழ் நலத்தைப் பெறுகின்றார்.

"இளங்கோவடிகள் தமிழ்நாட்டுப்பற்று சோழ பாண்டிய சேர மன்னரை வாழ்த்தும் அன்பாக மட்டும் நிற்கவில்லை. நாடுகளையும் நகரங்களையும் ஆறுகளையும் சோலைகளையும் புகழும் ஆர்வமாக மட்டும் நிற்கவில்லை. சிறந்த கலைகளில் பயின்ற கலைஞர்களின் சிறப்புகளைப் போற்றுவதோடு மற்றும் நிற்கவில்லை. பந்தடிக்கும் பெண்கள் முதல் நெற்குற்றும் பெண்கள் வரையில், ஆயர் முதல் வேட்டுவர் குறவர் வரையில் தமிழகத்தில் வாழ்ந்த மக்களின் ஆடல் பாடல்களையெல்லாம் போற்றுவதாக உயர்ந்து நின்றது". (ப. 42-43)

என்று இளங்கோவடிகள் உள்ளம் எல்லாரிடமும் பரந்து சென்று பற்றிய பான்மையைச் சுட்டும்போது இவரும் இதே வகையில் வாழ்ந்தவர் என்பதை நினைக்க வேண்டியுள்ளது.

இவ்வாறு இளங்கோவடிகளின் சிறப்பினை விளக்கிக் காட்டிய இவர், தொடர்ந்து நூல்வழியே சென்று பாத்தி

ரங்களின் தன்மைகளேயும், நிகழ்ச்சிகளேயும், பிறவற்றை யும் எவ்வெவ்வாறு அவர் நமக்கெல்லாம் அறிமுகம் செய்து வைக்கிருர் என்பதைப் பலவகையில் விளக்கு கிருர். சிலப்பதிகாரம் என்று இந்நூலுக்கு அமைந்த பெயர் பற்றி இவர் விளக்கும் திறன் எண்ணத்தக்கது.

"கண்ணகி காவியத் தலைவி. இளங்கோ தாம் இயற்றிய காவியத்திற்குக் கண்ணகி என்றே பெயர் வைத்திருக்கலாம். தண்டமிழ்ச் சாத்தனுர் தம் காவி யத்திற்கு மணிமேகலை என்று பெயர் வைத்திருப்பது போல் இவரும் அமைத்திருக்கலாம். கலையுள்ளம் படைத்த இளங்கோ கண்ணகியின் காற்சிலம்பை நம் கண்முன் நிறுத்தும் வகையில் காவியத்திற்குச் சிலப்பதிகாரம் என்று பெயர் அமைத்துள்ளார்."

"புகார் காண்டத்தில் சிலம்பு திருமண வீட்டில் சிறு அணிகலனுக உள்ளது. மதுரைக் காண்டத்தில் வீர நங்கையின் கையிலே விளங்கி அரசனுடைய அரண்மனைக்குச் செல்லுகிறது; வழக்கு ஆடுவதற்கு உரிய பொருளாக விளங்குகிறது. வஞ்சிக் காண்டத் தில் வழிபாட்டுக்கு உரிய பெருஞ்சிறப்போடு திகழ் கிறது" (பக். 57).

எனக் கூறுகின்ருர். எனவே, சிலப்பதிகாரம் என்ற பெய ரின் சிறப்பு நன்கு திறனறிந்து காட்டப்பெறுவதை உணர் கின்ருேம் நாம். பின்னர், நூலின் ஒவ்வொரு பகுதியிலும் அமைந்த ஒவ்வொரு நிகழ்ச்சியினேயும் எடுத்து அதை இளங்கோவடிகள் விளக்கும் திறனேயும் அவ்வாறு விளக்கவேண்டிய தேவையினேயும் நன்கு எடுத்துக்காட்டு கிருர். மதுரையில் மாடலன் கண்டு கோவலன் பண்டைப் பெருமைகளேயெல்லாம் கூறிய தன்மையினேயும் அதனுல் பயில்வார் பெறும் உளநெகிழ்வினேயும் சுட்டி (பக். 68-69) 'கோவலன் உயர்ந்தவன்' என்ற கொள்கையினே நிறுவப் பயன்படுத்துகிருர்.

'வடுநீங்கு சிறப்பின் மனையகம் மறந்தென்' என்ற அரங்கேற்று காதையின் கடைசி அடிக்கு சொல் சொல் லாகப் பிரித்துத் திறன் கண்டு அவற்ருல் விளக்கப்பெறும் வாழ்வின் விளக்கங்களைச் சுட்டிக்காட்டுகிருர்.(பக். 74-75) இவ்வாறே இளங்கோவடிகள் எடுத்தாளும் ஒவ்வொரு சொல்லின் திறமுமறிந்து அவற்றைப் பயன்படுத்திய நெறி யினையும் அவற்ருல் விளங்கவைக்கும் பொருளினையும் நுணுகி ஆராய்ந்து விளக்கும் திறன் நூல் வழியே செல் லின் நன்கு புலனுகும். அப்படியே இளங்கோவடிகளின் வருணனைத் திறனையும் உணர்ச்சிக்கேற்ற நடையமைக் கும் திறனையும் தம் நூலை நாடகப் போக்கில் நடத்திச் செல் லும் போக்கையும் பிறவற்றையும் தெள்ளத் தெளியக் காட்டுகின்ருர்.

இளங்கோவடிகள் அறவோராய் இருந்து, தாம் ஓர் அரசகுடும்பத்தில் பிறந்தவராயிருந்தும் மூவேந்தரையும் ஒப்ப நோக்கிய பண்பையும் சிறந்த செல்வியாகிய மாத வியைப் பழிக்காது உயர்த்திப் பாராட்டும் செம்மையினை யும் அதன் வழி எவ்வுயிரிடத்தும் அன்பினைக் காட்டும் அறவோர் செயலையும், தவறு செய்தவர்களைப் புண்படா மல் திருத்தும் நலத்தையும் காட்டி நடுநிலை பிறழா நல்ல வாய்மை நெறியைக் கடைப்பிடித்த தன்மையினை நன்கு காட்டுகிருர். அப்படியே இளங்கோவடிகள் சமண சமயத் தவராயிருப்பினும் சமயப் பொதுமை உடையராய் எல் லாச் சமயங்களுக்கும் ஏற்றங் காட்டிப் போற்றுவதையும் கூறத் தவறவில்லை.

> "இளங்கோவடிகள் பொழுதுபோக்குக்காக கலைக் காவியம் இயற்றிவில்லை. கற்பவரின் உள்ளத்தில் விழுமிய உணர்ச்சிகளைத் தோற்றுவித்து அவர்களை உயர்த்த வேண்டும் என்று விரும்பியுள்ளார்கள். அதனுல் காவியத்தின் இறுதியில் கலைஞர் அறவோ ராகி நல்வழியை எடுத்துரைக்கிருர்."

என்று தம் ஆய்வினை அறுதியிடுகிறார். இந்த அடிப்படையிலேதான் இவர்தம் நூல்கள் பலவும் சிறப்பாக 'மண் குடிசை'யும் அமைந்திருப்பதைப் பயில்வோர் உணர்வர்.

இளங்கோவடிகள் காட்டிய நெறியிலே நின்றுதான் சிலம்பில் வரும் முக்கிய பாத்திரங்களாகிய கண்ணகி, மாதவி என்ற இருவரையும் பற்றித் தனித்தனித் திறனாய்வு நூல்கள் எழுதியுள்ளார். அவற்றுள் இருவர்தம் வாழ்க்கைப் போக்கு-தடைப்பட்ட வாழ்க்கை நிகழ்ச்சிகள்-இயற்கைச் சூழல்-சமுதாயநெறி இவை பற்றியெல்லாம் இளங்கோவடிகள் வழிநின்று ஆய்ந்து அவர்தம் குற்றமற்ற தன்மையினையும் அப்பாத்திரங்களின் உள்ள உணர்ச்சிகளையும் அவ்வுணர்ச்சிகள் வழியே தோன்றிய நிகழ்ச்சிகளையும் நன்கு விளக்கிக் காட்டியுள்ளார். அவை இரண்டும் பயில்வார் உள்ளத்தைவிட்டு என்றும் நீங்காத சொல்லோவியங்களாம்.

## குறுந்தொகையும் நெடுந்தொகையும்

இனி, மு.வ. அவர்கள் தனித்தனியாக இரண்டு பாடல்களை எடுத்துக் கொண்டு திறனாய்ந்த வகையினைக் காண்போம். ஒன்று, 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற குறுந்தொகையின் இரண்டாவது பாட்டு; மற்றொன்று, 'அளிநிலை பொறாஅது' எனத் தொடங்கும் நெடுந்தொகையின் ஐந்தாவது பாட்டு. முதல் பாட்டு கரந்தைத் தமிழ்ச்சங்க ஆண்டுவிழா (1949)வின் தலைமைச் சொற்பொழிவு. மற்றது, சென்னைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் பச்சையப்பன் கல்லூரியில் (1944) ஆற்றிய மூன்று மணி நேரச் சொற்பொழிவு. இந்த இரண்டிலும் மு. வ. அவர்கள் திறனாய்வுத் திறன் முழுவதையும் பெய்து, இந்தப் பாடல்களைப் பயில்வோர் உள்ளத்தில் என்றும் பதியவைக்கின்றார். முன்னதாகிய குறுந்தொகைப் பாடலை இங்கே காண்போம்.

இப்பாடல் சங்க இலக்கியக் குறுந்தொகைப் பாடலாக அமைவதோடு திருவிளையாடற் புராணத் தொடர்

புடைய பாடலாகவும் அமைகின்றது. பாட்டின் தொன்மையினையும் கதையின் புதுமையினையும் சுட்டி இவர், இப்பாடல் குறுந்தொகையில் இடம் பெற்ற தன்மையினைச் சுட்டிக் காட்டி, கற்பனை இப்பாட்டு அளவிலும் பாடியவர் பெயர் அளவிலும் எந்த வகையில் சென்றது என்பதையும் விளக்குகிறார். இருவேறு கற்பனைகளை விளக்கிய இவர்,

"பாட்டு எழுந்த காலத்து அமைந்த கற்பனை ஒரு வகை யானது; இருவகைக் கற்பனைக்கும் வேறுபாடு உள்ளது. முன்னது; உள்ளது புனைந்து கூறியது; பின்னது இல்லது புனைந்து கூறியது" (ப. 18)

என்கிறார். பின் இப்பாட்டின் அடிப்படையில் அகம் புறம் பற்றியும், அகப் பொருளில் அமைந்த பாடல்கள் பற்றியும் இறையனார் பற்றியும் இதன் உரையினைப் பற்றியும் பல வகையில் விளக்கி, பின் இலக்கியம் பற்றிச் சற்றே விளக்குகிறார்.

"இசைக்கும் இல்லாத தனிச்சிறப்பு ஒருவகையில் இலக்கியத்திற்கு உண்டு. இசை நுண்ணிய உணர்ச்சிகளை மட்டும் புலப்படுத்த, இலக்கியம் உணர்ச்சிகளைப் புலப்படுத்திவதோடு அறிவுக்கும் விருந்தாய் அமைகிறது. அதனால்தான் பாடுந்தொறும் கேட்குந் தொறும் இனிமை பயக்கும் இசைபோல் அல்லாமல் நினைக்குந்தொறும் பேசுந்தொறும் எப்போதும் இன்பம் பயக்கும் தனிச்சிறப்பு இலக்கியத்திற்கு உள்ளது. உள்ளக் களிக்கும் பெருஞ்சிறப்பு இலக்கியத்திற்கு அமைந்திருத்தலால்தான் அது பல நூற்றாண்டுகளைக் கடந்தும் அழியாமல் வாழ வல்லதாய் விளங்குகிறது. தலைமுறைதலைமுறையாக மக்கள் நினைந்து நினைந்து மகிழ்ந்து போற்றிக் காத்து வருதற்குரிய கலைச்செல்வமாக உள்ளது இலக்கியம்" (ப. 33)

என்று இலக்கியத்தைக் காட்டி, அந்த இலக்கிய மனத்தைத் தேர்ந்தறியும் தும்பிகளாகப் புலவர்களைச் சுட்டுகிருர். இந்த இலக்கியம் பற்றிக் கூறுகின்ற இவர் உள்ளத்தில் மணிவாசகர், வள்ளலார் போன்ருர் வாக்குகள் அப்படி உணர்ச்சி பெற்று உருண்டோடி வருவதைக் காண முடிகின்றது. தானே, அந்த வண்டுகளுள்–திறனறியும் தெளிந்த வண்டுகளில் ஒன்ருக மாறிவிடுகிருர். மேலும் அப்புலவர்களையும் தும்பிகளையும் இணைத்துப் பார்க்கும் இவர் உள்ளம்,

"தேன் நுகரும் தும்பிகள் பாடி மகிழ்வன; கூடிக் களிப்பன. பாடாமல் இருத்தலும் அவைகளால் இயலாது; ஒருங்கே கூடாமல் இருந்தாலும் அவைகளால் இயலாது. இந்த இருபெற்றியும் இலக்கியத் தும்பிகளாகிய புலவர்க்கும் அமைந்துள்ளன. தாம் கண்ட புதிய கற்பனைகளையும் தாம் உணர்ந்த புதிய உணர்வுகளையும் பிறர்க்கு எடுத்துரைக்காமல் அமையாக இருத்தல் புலவரால் இயலாது. தம்போன்ற மற்றப் புலவர் பெருமக்களோடு அளவளாவாமல் இருத்தலும் இயலாது" (ப. 41)

எனப் பேசுகின்றது. தொடர்ந்து தேன் நுகர்தலின் பயன்பற்றியும் நவில்தொறும் நயம்பற்றியும் பலவாறு சுட்டிக்காட்டி ஒலிநயத்தின் ஏற்றத்தினையும் விளக்கி, பாட்டின் ஒவ்வொரு சொல்லையும் பகுத்துப் பகுத்துப் உணர்ந்து உணர்ந்து அதன்திறனறிந்து தெளிய வைக்கிருர். பின் மனித மனத்தின் உயர்வையும் அது பொருள்களைத் துய்த்து உணரும் சிறப்பையும் எண்ணி எண்ணிக் காட்டுகிருர்.

"தும்பிகளுக்கு இல்லாத சிறப்பு மக்களின் மனத்திற்கு உள்ளது. நண்டுகள் தும்பியாவதில்லை. நாரைகள் தும்பியாவதில்லை. தும்பிகளும் நண்டு நாரைகளைத் தம்மோடு சேர்த்துக் கொள்ளுவதில்லை.

தாமரைத் தண்தாதிற்கும் சந்தனமரத் தேன் கூட்டிற்கும் அவைகளை அழைத்துச் செல்வதில்லை. தேன்கூட்டில் சேர்த்து வைக்கும் தேனை மற்ற உயிர்கட்குப் பகிர்ந்து அளித்தலும் இல்லை.

"ஆனால் நண்டுகளாகவும் நாரைகளாகவும் உள்ள மக்களின் மனங்கள் தும்பிகளாக உயர்வதற்கு இடம் உண்டு. புலமைத் தும்பிகள் இப் புதிய தும்பிகளைத் தாமரைத் தண்தாது ஊதும் போதும் அழைத்துச் செல்லும்; சந்தன மரத் தீந்தேன் தொடுக்கும்போதும் அழைத்துச் செல்லும். தொடுத்த தீந்தேனை உடனிருந்து நுகருமாறு அழைத்து மகிழும். தாம் இன்புறுவது உலகின்புறக் காணும் ஆர்வம். இந்தப் புலமைத் தும்பிகளுக்கு இயல்பாக உள்ளது" (ப. 57—58)

என்ற வரிகளைப் பயிலும்போது காணும் உவமையும் விளக்கமும் நம்மை நாமே மறக்கச் செய்கின்றன. பின் பலவகையில் இப்பாடலின் உட்பொருளையும் அங்கமைந்த ஒப்பிடுமுறை முதலியவற்றையும் அதை அளந்தறியும் ஆற்றலாம் கருவியையும் பிறவற்றையும் விளக்கி இறுதியாக இப்பாட்டினைப் பற்றிய முற்றிய கருத்தினைத் தெளிவு படுத்துகிறார்.

"இப் பாட்டு தோன்றிய நாள்முதல் பலர்க்கும் பலவகைக் கற்பனைகளையும் ஆராய்ச்சிகளையும் தூண்டிவரும் பழம்பாட்டு...தொடக்கக் காலம் முதல் இவ்வாறு கற்பனைக் களஞ்சியமாகவும் ஆராயச்சித் தூண்டுகோலாகவும் விளங்குவதால்தான் மிகச்சிறந்த பாட்டாக அன்றும் விளங்கியது; இன்றும் விளங்கி வருகின்றது" (ப. 71) "இந்தப் புதிய கற்பனை உலகிலே, செந்நாப் புலவர்களே கொங்குதேர் வாழ்க்கைத் தும்பிகளாகக் காட்சியளிக்கின்றனர். கற்பனையே சிறகு ஆகின்றது. இலக்கிய உலகமே சோலையாகின்றது" (ப. 72)

> "இன்று இப்பாட்டின் உயரிய கருத்துக்கள் மற்றப் பாட்டுக்களின் பெற்றியை ஆராய்வதற்கு உதவியாக நிற்கின்றன. ஆராய்ச்சிக்கு உரிய பொருளாக நின்ற பாட்டு ஆராய்ச்சிக்கு உதவும் கருவியாக நிற்கின்றது." (ப. 73)

என்று இதையே கருவியாக - ஆராய்ச்சிக்கு உதவும் கருவியாகக் காட்டித் தம் நூலை முடிக்கின்றார். இந்நூல் முழுவதையும் ஆரத் துய்த்துத் தம்மை மறந்து பயின்றாலன்றி இவர்தம் திறனாய்வின் தெளிவையும் விளக்கங்களையும் புதுமை காணும் தன்மைகளையும் உணர முடியாது. இதே வகையில் அமைவது மற்றொரு நூலாகிய 'ஓவச்செய்தி'. இது குறுந்தொகைப் பாட்டினைப் பற்றியது; அதுவோ நெடுந்தொகைப் பாட்டிற்குரியது. அதன் நலத்தையும் சிறிது காண்போம்.

"இந்த 'அளிநிலைபொறாஅது அமரிய முகத்தள்' என்று தொடங்கும் அகநானூற்றின் ஐந்தாவது பாட்டு இவர் உள்ளத்தை எவ்வெவ்வாறு தொட்டு உலுக்கி உள்ளது என்பதைத் தம் சிறு நன்றி உரையிலேயே முதலாவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

> "ஒரு பாட்டு: அதைக் குறித்துப் பலநாள் போராட்டம்; இரண்டு நாள் இரவும் பகலும் ஏக்கம். மூன்றாம் நாள் வேலத்து மலையை அடுத்த அழகிய ஓடையில் உலவும்போது எதிர்பாராத விளக்கம்; நல்ல தெளிவால் பிறந்த பேருவகை - இவையே இந்நூலாக உருப்பெற்றது."

என்று முன்னுரையில் இந்நூல் தோன்றக் காரணமாயும் செயலாயும் அமைந்தவற்றைச் சுட்டிக்காட்டி விடுகிறார். வேலம் இவர்தம் சொந்த ஊர். இந்த ஊரின் பக்கத்தில் ஒரு மலையும் அடுத்து ஒரு சிற்றோடையும் உண்டு. ஊரில் தங்கும் நாட்களிலெல்லாம் அந்தப் பக்கம் மாலை வேளைகளில் இவர் தவறாது செல்வது வழக்கம். நான் சென்று தங்கிய ஓரிரு நாட்களில்கூட, என்னையும் அழைத்துக்

கொண்டு அந்த இடங்களையெல்லாம் காட்டி மகிழ்ந்தமை இன்னும் நினைவில் உள்ளது. பக்கத்து மலையின் நடுப் பாகத்தில் உயர்ந்து நிற்கும் பகுதி ஒரு சிவலிங்கம்போல் தோற்றமளிக்கும். அந்தக் காட்சியினையும் அதன் சுற்றுப் புறக் காட்சிகளையும் இந்த ஓடையின் இனிமையையும் இவர் நன்கு கண்டு துய்த்தவர். அங்கே ஒருநாள் உலவிய போதுதான் இப்பாட்டிற்குப் புதுவிளக்கம் தன் உள்ளத் தில் புலப்பட்டது என்கிறார். அதைப் 'புதுவிளக்கம்' என்றே மூன்றாவது பகுதியில் தெள்ளத் தெளியக் காட்டுகிறார்.

கலைக்கும் வாழ்வுக்கும் உள்ள தொடர்பை நூல்களின் துணை கொண்டும் அறிஞர்கள் அறிவுரை கொண்டும் ஆராயும் ஆராய்ச்சியில் மனம் ஈடுபட்ட அந்தத் தொடக்க அனுபவத்தைச் சுட்டிக் காட்டி (ப. 9) மேலே செல்லு கின்றார். இக்காலம் தான் (1944) இவர் நூல் எழுதத் தொடங்கிய காலம் எனலாம்; சிறப்பாக நாவல் எழுதத் தொடங்கிய காலம் எனலாம். பலவற்றையும் பழுதற நூல் கள் வழிக் கற்றும் அறிஞர் வாய்க் கேட்டும் சிந்தித்துச் சிந்தித்துத் தம் 30 வயதுக்கு மேலேதான் இவர் நூல் எழுதத் தொடங்கினார் என்பது ஈண்டு நினைவு கூர்தற் பாலது. இந்த உண்மையை உரைக்கும் முகத்தோடு, இப்பாடல் தந்த இன்பத்தை நமக்கு வாரி வழங்குகின்றார். மேலும் இத்தகைய முயற்சிக்கும் உணர்வுக்கும் வாழ்க்கை அனுபவம் தேவை என்பதையும் இவர் சுட்டிக் காட்டத் தவறில்லை. (ப. 11–12)

> "புலவர் பாடிய பாட்டு இருந்தும் பயன் இல்லை, சொற்பொருள் அறிவு இருந்தும் பயனில்லை; தெளிந்த வாழ்க்கை அனுபவம் வேண்டும் என்று உணர்ந் தேன்." (ப. 12)

என்று தாம் பெற்ற அனுபவத்தைச் சுட்டிக் காட்டுகின்றார்.

பின், பாட்டினையும் அதற்கு உரையாசிரியர் கண்ட பழம்பொருளையும் அவற்றோடு ஒட்டிய விளக்கங்களையும்

இவர் தெளிவுபடக் காட்டிக் கொண்டே செல்கின்றார். இவர் இப்பாட்டினை விளக்க வேறு எத்தனையோ சங்கப் பாடல்களைத் தமக்குத் துணை யாக அழைத்துக்கொள்ளு கிறார். இவரே,

> "ஒரு பாட்டைக் கற்பவர்க்கு ஏதேனும் ஐயம் எழுந்தால் மற்றப் பாட்டுக்கள் கருத்துக்கள் முன் வந்து துணை செய்யும்; ஐயம் போக்கும்; உண்மை உணர்த்தும்." (ப. 34)

என்கின்றார்.

அடுத்து வருகின்ற 'இலக்கியமும் வாழ்க்கையும், என்ற தலைப்பு இவர் தொடர்ந்து காட்ட இருக்கும் இப் பாட்டின் புதுப் பொருளுக்குத் தோற்றுவாயாக—வழி காட்டியாக அமைகின்றது. இப்பகுதியில் உண்மையில் வாழ்க்கை நெறியில் அன்றும் இன்றும் மக்கள் காண்பன, துய்ப்பன, உணர்வன இவை பற்றியெல்லாம் விளக்கம் தருவதோடு அவ்வவற்றிற்கேற்ற சங்கப் பாடல்களையும் துணைகொண்டு காட்டுகின்றார்.

> "அறிவும் உணர்வும் ஆகிய இரண்டும் வேண்டும் என்று தாமே தெளிந்து, ஒருபுறம் உலக வாழ்க்கை அறிவை வளர்க்க, மற்றொரு புறம் காதல் வாழ்க்கை உணர்வைப் பண்படுத்த வாழவேண்டும். அவ்வாறு அமைந்து திருந்திய நல் வாழ்க்கையின் அனுபவத்தால் உயர்ந்த பாட்டு உணரப்படுவது எளிதாகும்" (ப.108)

என்று இப்பகுதியை முடிக்கும்போது தாம், இவ்வறிவா லும் உணர்வாலும் இப்பாட்டின் பொருளைக் கண்டு துய்க்க முடிந்தது எனச் சுட்டிய பிறகு புது விளக்கத்துள் இவர் புகுகின்றார்.

புதுப்பொருள் காணும்போது தொடர் தொடராகப் பகுத்து ஒவ்வொன்றன் இன்றியமையாச் சிறப்பையும்,

அவைஅவை பொருள் விளக்கும் பான்மையினையும் இவர் காட்டுவதை நூல்வழியே செல்வார் உணர முடியுமே யன்றி இங்கே ஒருசில நிமிடங்களில் உணர்த்த முடியாது. இலக்கியத்தில் பெற்றியினையும் அது ஆற்றும் செயலையும் வியந்து வியந்து போற்றுகிறார் இவர். (ப. 119) 'வாயல் முறுவல்' என்ற தொடரை நன்கு விளக்கியதோடு, இத் தலைவி போன்றே கண்ணகியின் வாயல் முறுவல் தன்மை யினையும் விளக்கி, இருவரும் தோல்வியுற்ற நிலையினை நன்கு காட்டுகிறார் (ப. 130—134).

'ஓவச் செய்தியின் ஒன்று நினைந்து ஒன்றி' என்பதில் வரும் 'ஒன்று' என்னும் சொல்லுக்கு மூன்று பக்க அளவில் இவர் காட்டும் திறனறி விளக்கம் உவந்து போற்றக் கூடியதாகும். இனி ஓவச் செய்தியை அடுத்துவரும் பகுதி யில் (4) விளக்குவதற்குத் தோற்றுவாயாக இப்பகுதியை முடிக்கும்போது 'மாமலர் மணிஉரு இழந்த அணியழி தோற்றத்தின்' தன்மையைத் தொட்டுக்காட்டி விளக்கி ஓவச் செய்தியின் உள் புகுகின்றார். இதற்கிடையில் 'தலைவி ஓவியமான' நிலையினையும் அதற்கு அடிப்படையாக அமைந்த நிலைகளையும் இவர் சுட்டியுள்ளமை பயின்று துய்க்கத் தக்கதாகும்.

பின், இவர் எடுத்துக் கொண்ட 'ஓவச் செய்தி' யினைப் பல சங்கப் பாடல்களின் துணைகொண்டு விளக்கி இலக் கிய மரபுகளையும் சுட்டிக்காட்டி, பல்வேறு பிரிவுகளின் தன்மைகளையும் போர்க்கடமை முதலியவற்றையும் குறித்து, கடைசியில் தான் பெற்ற தெளிவினையும் திட்ட மாகக் காட்டிவிடுகிறார்.

> "காதலர் வாழ்க்கையின் தூய்மையை அளந் தறிய ஒரு சிறந்த கருவி உண்டு; அதுதான் தன்னலத் துறவு—தியாகம். சாவது போன்ற துயர நிலையிலும் தன் துயரை அடக்கிக் காதலனுடைய புகழைக் காக் கும் ஆர்வம் தலைவியிடம் உண்டு. வாழ்நாள் முழுவ தும் தன்னலத் துறவு இருந்து வந்தால்தான், உயி

> றொடு போராடும் நிலையிலும் அந்த உயர்ந்த பண்பு ஒளி வீசும். இந்தப் பாட்டில் காணும் தலைவியின் வாழ்க்கை அத்தகைய ஒளிமிக்க வாழ்க்கை" (ப.175)

என்று இப்பாட்டில் வரும் தலைவியின் சிறப்பை விளக்கிக் கடைசியாக இப் பாட்டினைப் பற்றியே ஒரு விளக்கம் தந்து இந்த நூலை முடிக்கின்றார்.

> "இப் பாட்டு ஒளிமிக்க ஒரு முழுமணி. இதன் தூய ஒளி கலைத்துறையிலும் வாழ்க்கையிலும் இருளைப் போக்க வல்ல சிறந்த விளக்கம். இத்தகைய மணிகள் பல சங்க இலக்கியப் பேழையுள் காணலாம். ஆயினும் இந்த மணியே என் உள்ளத்தே போராட்டத்தை விளைத்து இறுதியில் இன்பப் பரிசையும் நல்கியது.ஆதலின் இந்த ஒரு மணியைப் பலமுறை எடுத்துக் கூறினேன்."

என்று தான் இந்தப் பாடலில் தன்னை மறந்து மூழ்கிய நிலையினை விளக்குகிறார்.

## சங்க இலக்கியங்கள்

இந்த இரு தனிப்பாடல்கள் ஆய்வுப் பெருநூல்களேயன்றி, சில பாடல்களை அவ்வப்போது எடுத்து எழுதி இதழ்களுக்கு உதவியும் மேடையில் பேசியும் வந்தவற்றையெல்லாம் தொகுத்துச் சிறு நூல்களாகவும் அச்சிட்டுள்ளார். அவை நடைவண்டி, புலவர் கண்ணீர், முல்லைத் திணை, இலக்கியக் காட்சிகள், தமிழ் நெஞ்சம் போன்றவையாகும். இவை அனைத்தும் சங்க காலப் பாடல்களை-அகம் புறம் இருவகைப் பாடல்களை – தனித்தனியாகவும் இணைத்தும் எழுதிய கட்டுரைகள் அடங்கிய நூல்களாகும். இவற்றின் முன்னுரைகளிலேயே இந்நூல்களின் அமைப்பினையும் எழுதிய நிலையினையும் இவர் சுட்டிக் காட்டிச் செல்லுகின்றார்.ஒவ்வொரு நூலும் தனித்தனியாகத் திறனாயும் நிலையில் அமைந்து எடுத்துக்கொண்ட பாடல்களின் உட்கருத்துக்களையும் விளக்கங்களையும் கொண்டு விளங்குகின்றன.

இவர் முன்னுரைகளில் சில அடிகளை இங்கே காணின் சாலும் என எண்ணுகிறேன்.

"மற்றச் சிறுவர்கள் மணல் வீடு கட்டும்போதும், நடைவண்டி ஓட்டும்போதும், வளர்ந்தவர்கள் அந்த விளையாட்டுக்களைப் பார்க்கின்றனர்; வேடிக்கையாகப் பார்த்து மகிழ்கின்றனர். உள்ளம் பண்பட்ட சான்றோர்கள், அந்தச் சிறுவர்களின் மணல் வீட்டையோ நடைவண்டியையோ வெறுப்பதே இல்லை; தம்மை மறந்து கண்டுகளிக்கும் நெஞ்சம் பெற்று மகிழ்கின்றனர். இளைஞர்களின் ஒழுக்கநெறி பிறழாத காதல் வாழ்வையும் சான்றோர்கள் அவ்வாறே நோக்குகின்றனர். கற்பனை வளம்பெற்ற சான்றோர்கள் அவ்வாழ்வைப் பாட்டாக வடித்துப் பிறரும் நோக்கி மகிழுமாறு தருகின்றனர். அவ்வாறு சங்ககாலத்துத் தமிழ்ச் சான்றோரால் தந்தருளப் பெற்ற பாட்டுக்களில் சிலவற்றின் விளக்கங்கள் இந்நூலில் உள்ளன."

என்று நடைவண்டிக்கு முன்னுரை தந்து நூலை நம் முன் வைக்கின்றார். இவ்வாறே மணல்வீடு என்று மற்றொரு நூலும் உண்டு. நல்ல தலைப்புக்களிலே இவருக்கே இயல்பாயமைந்த எளிய நடையிலே சாதாரணக் கல்வி கற்றோரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் உயர்ந்த சங்கப் பாடல்களில் உள்ள விழுமிய கருத்துக்களையும் அவை வாழ்வொடு பொருந்திய வகைகளையும் நன்கு விளக்குகிறார்.

"இலக்கிய உலகத்தில் சான்றோர் பலர்உள்ளனர். அவர்தம் தொடர்பு வாழ்க்கைக்கு இன்றியமையாதது. பழந்தமிழ் இலக்கியத்தில் அச்சான்றோர் உணர்வெல்லாம் தெளிவாகக் காண்கிறோம். அவர்தம் உணர்வே தமிழன்னையின் நெஞ்சம். அவ்வுணர்வின் பெற்றி ஒருவாறு சுருங்கிய அளவில் எடுத்துரைப்பதே இந்நூலின் நோக்கமாகும்"

என்று தன் 'தமிழ்நெஞ்சம்' என்ற நூலின் முன்னுரையில் கூறி அந்நூலை எழுதத் தொடங்குகிறார்.

இலக்கியத்தில் வரும் காட்சிகள் பலவற்றை— இயற்கைக் காட்சி—வாழ்க்கைக் காட்சி—அவற்றின் பெறும் உணர்வு முதலியவற்றுள் சிலவற்றைத் தொகுத்து இலக்கியச் காட்சிகள் என்ற நூலை எழுதியுள்ளார். அம்மூவனார் பாடிய ஒரு பாடலை (நற். 275) வைத்துக்கொண்டு அவர் உள்ளத்தை நன்கு அலசி எடுத்துக் காட்டி அவர் உணர்வைத் தம் உணர்வால் புலப்படுத்தி நம்மை அவ்வுணர்வு கொண்டு இலக்கிய இன்பத்தில் திளைக்கச் செய்கின்றார்.

> "பொதுவாக மற்றவர்கள் கண்டு புறக்கணித்துப் போகின்ற ஒரு சில காட்சியே அம்மூவனார் என்ற பழம்புலவர் உள்ளத்தில் இத்தனை உணர்ச்சியையும் வளர்த்துள்ளது. நெய்தல், மக்களைப்போல் புண்படுகிறது; படுத்து உறங்குகிறது; விழித்து எழுகின்றது. அது உணரவேண்டிய உணர்வுகளையெல்லாம் அதன் பொருட்டுப் புலவர் உணர்ந்து உருகுகிறார். எல்லாம் அவர் கற்பனைத் திறனாகும்" (ப. 27)

என்று தானே அந்த உணர்ச்சியில் மூழ்கித் திளைக்கிறார். இத்தகைய விளக்கங்கள் இந்நூலிலும் பிறவற்றிலும் விரிந்து கிடக்கின்றன.

'புலவர் கண்ணீர்' என்பது சங்கப் பாடல்களுள் ஒரு வகையாக அமைந்த கையறுநிலைப் பாடல்களின் விளக்கமாகும். நல்ல கவிஞர், தம் புரவலர் – மன்னர் – சான்றோர்– செந்தண்மையாளர் மறைய உளமுருகிப் பாடிய புலவர் தம் பாடல்களுள் சிலவற்றின் உணர்ச்சி வயப்பட்ட விளக்கங்களை இந்த நூலில் காணலாம். இதில் தனிப்பட்டவரைப் பற்றியவையும் உண்டு; பொதுவாக அமைந்தவையும் உண்டு.

'முல்லைத்திணை' என்பது அகத்திணைப் பற்றிய பாடல்களின் விளக்கத்தைப் பற்றிய ஒரு நூலாகும். இதில் முல்லைத்திணையின் இயற்கை வளம் - சூழல் - அமைப்பு - வாழ்க்கை முதலிய அனைத்தும் நன்கு விளக்கப் பெறுகின்றன. நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் எத்தனையோ சங்க கால முல்லைத் திணைப் பாடல்களின் அடிகளும் அவற்றின் விளக்கங்களும் நம்மை ஆட்கொள்ளுகின்றன.

> "முல்லைநிலம் வளமுறப் பரவிக் கிடக்கும் நாடு இது. ஆதலின் நேரில் கண்டறிந்த இயற்கையின் எழிலையும் மக்களின் வாழ்க்கை முறையையுமே பாட்டில் வடித்துள்ளனர். பாட வேண்டும் என்ற மரபுக்காக, தாம் காணுதவற்றைக் கற்பனை செய்து பாடவில்லை. கண்டு உணர்ந்தவற்றிற்கே கலைவடிவம் தந்துள்ளனர்." (ப. 10)

என்று இப்பாடல்கள் - முல்லைத்திணைப் பாடல்கள் புலவர்கள் கண்ட வாழ்வையும் அதற்கடிப்படையான இயற்கையினையும் பின்னிப் பாடியவை என்பதை விளக்குகிருர். இவ்வாறு அமைந்த நூல்களைத் தவிர்த்து வேறு வகைப்பட்ட அரசியல் சார்பான - பிறவகையான நூல்களிலும் இத்தகைய உயரிய சங்கப் பாடல்களைக் காட்டி, சமுதாயம் இழிநிலை எய்தாத வகையில் பண்பட்ட உள்ளமும் பரந்த மனப்பான்மையும் பெற்று உலகம் சிறந்து வாழ வேண்டிய வழிகளைக் காட்டிக்கொண்டே செல்கின்ருர்.

## விருந்துகளும் செல்வங்களும்

இன்னும் ஒரே வகையில் அமைந்த நூல்களை மட்டும் இங்கே சுட்டி அமையலாம் என எண்ணுகிறேன். திறனுய்வு நூல்களே அவை. அவை ஒவ்வொன்றைப் பற்றியும் ஒவ்வொரு தனிச் சொற்பொழிவே ஆற்றலாம். சங்க இலக்கியத் தொகுப்புகள் அனைத்தையும் துருவித்துருவி ஆய்ந்து அவற்றைச் செல்வமாகவும் விருந்தாகவும் நமக்கு வாரி அளிக்கின்ருர், வரதராசஞர். அவை நெடுந்தொகை விருந்து, நற்றிணை விருந்து, குறுந்தொகை

விருந்து, நெடுந்தொகைச் செல்வம், நற்றிணைச் செல்வம், குறுந்தொகைச் செல்வம் என்பனவாகும். இந்த நூல்கள் அனைத்தும் அவ்வத் தொகைகளின் பாடல்களை விளக்கும் தன்மையினைப் பயின்றோர் அறிவர். நான் அவற்றுளெல் லாம் புகாது, அவர் முன்னுரையில் சுட்டிய இரண்டொரு கருத்துக்களை மட்டும் உங்கள் முன் வைத்து விடைபெறு கின்றேன்.

நெடுந்தொகை விருந்தின் முன்னுரையில் இத்தகைய நூல்கள் எழுதவேண்டி நேர்ந்த காரணத்தை இவர் விளக்குகிறார்.

''சங்க இலக்கியம் என்றால் என்ன என்று அறி யாதவரும், அத்தொடரைக் கேட்டறியாதவரும் பலர். இந்த நிலை தமிழகத்தில் இனியும் நீடித்தால் நன்றன்று. சங்க இலக்கியம் என்றால், எமது எமது என்று பெரு மிதத்துடன் எண்ணும் நெஞ்சமும் கூறும் நாவும் இனி மிகுதல் வேண்டும்.

''இவ்வாறு மக்களில் பெரும்பாலோர் தம் முன் னோரின் இலக்கியச் செல்வத்தைப் போற்றும் நிலை வேண்டுமானால், பழைய இலக்கிய நூல்களை எளிய முறையில்—ஆயினும் அடிப்படையான உண்மை திரியா வகையில்—வெவ்வேறு வடிவில் தருதல் வேண்டும். சிறிது கற்றோரும் தாமே படித்துணருமாறு எளிதில் பொருள் விளங்க வேண்டுமானால், அரிய பழஞ் சொற்களையும் தொடர்களையும் புதிய எளிய சொற்களாலும் தொடர்களாலும் விளக்குதல் வேண் டும். இந்த நோக்கம் கொண்டே, இந்தச் சிறு நூலில் இச்செறிப்பு, வரைவு கடாதல் முதலான பல தொடர் கள் இல்லாமல், இக்காலத்தில் பயின்று வழங்கும் சொற்களையும் தொடர்களையுமே கூடியவரையில் பயன்படுத்த நேர்ந்தது. அதனாலேயே சந்திகளைப் பிரித்தலில் ஓரளவு மரபு கடந்து செல்லவும் நேர்ந்தது.

ஆசிரியரிடம் அணுகிப் பாடம் கேட்டுக் கற்கும், பழைய முறை, இன்று எல்லோக்கும் வாய்க்குமானல் இவ்வாறு எளிமைப்படுத்த வேண்டுவதில்லை. ஆயின் இன்றைய நிலை வேறு வகையாக உள்ளது.'' (ப. 4)

என்று தான் கொண்ட நடையினையும் பிறவற்றையும் விளக்குகிறார். இந்த முறை, இவர் எழுதிய எல்லா நூல்களுக்குமே பொருந்தும். எளிய நடை, பிரித்து எழுதும் முறை—சில வடமொழிச் சொற்களைக்கூட அந்த மரபிலேயே சுட்டி நெறி, இன்ன பிறவும் இந்த வகையில் அடங்கும். படைப்பிலக்கியங்களில் பாத்திரங்களின் பேச்சுகளில் சிலவிடங்களில் கொச்சை மொழிகளே பயின்று வருவதும் இக்கருத்திலேயாம். எனவே, இவர் உள்ளக் கருத்து சங்க இலக்கியங்களையும் வாழ்க்கை நெறிகளையும் எல்லாருக்கும் எளிதில் புரிய வைக்க வேண்டும் என்பதே யாகும்.

இந்த நூல்களைப் பயில்வார்க்கு மற்றொரு உண்மையும் விளங்கும். இவர் தம்முடைய பெரிய நாவல்களுக்கும் பிற நூல்களுக்கும் சிறுசிறு முன்னுரையோ அன்றி உற்றவர்தம் அறிமுகமோ அமைத்து எழுதியுள்ளனர். ஆயினும் இந்த நூல்களுக்குச் சற்றே விரிந்த முன்னுரைகளை எழுதியே நூல் எழுதத் தொடங்குவது நன்கு புலனாகும்.

'குறுந்தொகைச் செல்வம்' என்னும் நூலுக்குப் பனிரெண்டு பக்கம் முன்னுரை எழுதியுள்ளார். இது மட்டுமன்றி, பிற முன்னுரைகளும் கூடத் தனித்த திறனாய்வுக் கட்டுரைகளாகவே அமைந்துள்ளன.

''இவற்றில் உள்ள கற்பனைகள் உள்ளது புனைதலே அன்றி, இல்லது புனைதலாகக் கூறப்பட்டவையல்ல. இவற்றின் உயர்வு நவிற்சிகள் மருட்டி வியப்பூட்டுவன அல்ல; மெல்லக் கற்பனை உலகத்துக்கு ஈர்த்துச் செல்வனவாகும். தலைவனைப் பிரிந்த

தலைவி மெலிய, அவளுடைய கைவளைகள் உடனே கழலும், தலைவன் நீங்கியதும் பசலை வந்து பரவும்; அவன் வந்ததும் பசலை விலகும். இவை போன்ற உயர்வு நவிற்சிகள் அறிவை மருட்டும் தகையன அல்ல; தாலாட்டித் தூங்க வைப்பன எனலாம். நனவுலகத்திலிருந்து கற்பனை உலகத்திற்குச் செல்வதற்கு ஒருவாறு உதவுவன இவை". (ப. 10)

"இத்தகைய கற்பனையுலகில் திளைத்து இன்புற வேண்டுமாயின், ஆராய்ச்சி அறிவை ஓரளவு விட்டு, விளையாடும் மனப்பான்மை பெற்றால்தான் முடியும்; அஃறிணை உயர்திணை இயங்குவன இயங்காதன முதலான வேறுபாடுகளையும் ஓரளவு மறந்தால்தான் முடியும்". (ப. 13)

இவ்வாறு முன்னுரையில் சுட்டிய இவர் நூலுள் பல பாடல்களைப் பதினைந்து தலைப்புகளில் நன்கு விளக்கி நாமெலாம் அச்செல்வத்தைத் துய்த்துப் பயன்பெற வைக்கிறார்.

இவ்வாறே நெடுந்தொகைச் செல்வமும் அமைந்துள்ளது. அதன் முன்னுரையும் முன்கண்ட குறுந்தொகை முன்னுரையின் அளவே பனிரெண்டு பக்கங்கள் விரிந்துள்ளன.

"கதைகளையும் காவியங்களையும் கற்பவன் அவற்றில் வாழும் மாந்தர்களின் உலகத்திற்கே சென்றுவிடவேண்டும். தன்னை இழந்து கற்கவேண்டும்; தான் கலந்து கற்கவேண்டும், கதைகளிலும் காவியங்களிலும் உள்ள இன்ப துன்ப உணர்ச்சிகளையெல்லாம் தான் உற்றிடல் வேண்டும்." (ப. 4).

"தன்னை மறப்பதோடு அமையாமல் தன்னை இழந்து கதையின் உணர்ச்சிகளிலும் காவியத்தின்

உணர்ச்சிகளிலும் கலந்து உணர்தலே, இவற்றைக் கற்கும் முறையாகும்.'' (பக். 7),

''கதையும் காவியமும் கற்பவர்க்குக் கண் மட்டும் போதாது; செவியும் போதாது. சொற்கள் வாயிலாகவே கதை உலகத்திற்கும் காவிய உலகத்திற்கும் செல்ல வேண்டும். அந்தச் சொற்களின் பொருளை அறிந்திட மூளையின் உதவி வேண்டுவதாக உள்ளது. அறியாத சொற்களின் பொருளை அறிவதற்கு உழைப்பு வேண்டும்.'' (ப. 8).

''காவியம் கற்கத் தொடங்குவார்க்குச் சொல்லாராய்ச்சியும் வரலாற்று ஆராய்ச்சியும் துணைக்கருவிகளாக அமையும், கற்றுப் பயின்றபின், அந்தக் கருவிகளை மறக்கும் நிலை எய்தல் வேண்டும்.'' (பக். 10).

''நாடகம் முதலில் கலைகளில் உள்ள உணர்ச்சியை எய்த வேண்டுமானல், வாழ்க்கையில் நிறைந்த அனுபவம் இன்றியமையாதது.'' (ப. 12)

என்று நெடுந்தொகைச் செல்வத்தின் நீண்ட முன்னுரையில் பொதுவாக இலக்கியத்திறன் காண்பார்க்கு அமைய வேண்டிய பண்புகளையும் பயனையும் விளக்கிக் காட்டுவதை ஈண்டு எண்ணல் வேண்டும். இவ்வாறே நற்றிணைச் செல்வத்தில் இவர் கூறும் சில திறனய்வு முறைகளைக் கண்டு அமைவோம்.

''இலக்கிய விருந்து நுகர்வோர், பயிற்சி பெற்றவராக இருத்தல்வேண்டும். உவமைகள், வருணனைகள், சொற்பொருள் நயம் முதலிய இலக்கியச் செல்வங்களைத் திரும்பத் திரும்பக் கற்றுப் பயின்ற பயிற்சி, அந்நுகர்ச்சிக்கு உதவியாகும்.'' (ப. 3)

''பாட்டுக் கலைக்கு உயிர், உணர்ச்சிச் சிறப்பு; உடல், கற்பனை வளம்; உடை, ஒலிநயம்; இப்பாட்டுக்

களின் (நற்றிணை) உடை எளிமை சான்றது. உடல் அழகுற அமைந்தது; உயிரோ போற்றத்தக்க விழுப்பம் உடையது. உயிரின் வாழ்வுக்காக உடலும், உடலின் காப்புக்காக உடையும் அமைதலாகிய இயற்கையமைப்பை இப்பாட்டுக்களில் காணலாம்." (ப. 5)

"இல்லது புனைந்துரைத்தலாகிய கற்பனை இவற்றில் இல்லை. உள்ளதைப் புனைந்துரைத்தலும் உள்ளதை ஒழுங்குபடுத்திக் கூறுதலுமே இவற்றில் உள்ளன, ஆகவே, பாட்டுகளின் உடல் எனப் போற்றப்படும் கற்பனை, இவற்றில் அளவுபட அமைந்துள்ளது எனலாம்." (ப. 5)

"எளிய உடை சூழ்ந்த இத்தகைய அழகிய கலையுடம்புகளில் அமைந்துள்ள உணர்ச்சிகள் மாசற்றவை; நெறியானவை; போற்றத்தக்கவை." (ப. 5-6)

என்று இந்த நற்றிணைச் செல்வத்திலும் பொதுவாகத் திறனும் தன்மையினையும் திறனய்வாளனுக்கு இருக்க வேண்டிய பண்புகளையும் உழைப்பையும் உணர்வையும் கூறுகிருர். இந்த நூல்கள் அனைத்துமே இந்தத் திறனய்வின் அடிப்படையில் எழுதப்பெற்றவையே. எனினும் அளவும் காலமும் கருதி அவற்றின் உள் நான் புகவில்லை. மேலும் இந்நூல்கள் புகாத தமிழ் வீடுகள் கிடையா; படியாத மாணவர் இலர்; போற்ருத புலவர் இல்லை. எனவே இவை பற்றி நான் மறுபடியும் விளக்குவது தேவையற்றதும் கூட.

இந்த நூல்களின் முன்னுரைகள் வழியே இவர் காட்டும் திறனய்வு உண்மைகளையே ஈண்டு நான் சுட்டிக் காட்டினேன். இவ்வாறே இவர் எழுதிய நூல்கள் அனைத்திலும் இவர் காட்டிய திறனய்வு நெறியே பின்பற்றப் பெறுகிறது என்பதையும் ஓரளவு சுட்டிக் காட்டினேன்.

## புகழ் என்றும் வாழ்க

வாழ்க்கையினைப் பல்வேறு படைப்பு நூல்களாகிய நாவல்களிலும் பிறவற்றிலும் திறனாய்ந்து விளக்கி வாழ்வைச் செம்மைப்படுத்த முனைந்த வரதராசனாரை நேற்றுக் கண்டோம். திறனாய்வு இன்னதென்பதை இலக்கண மரபில் நின்றும் இலக்கிய நெறிவழியும் விளக்கிக் காட்டித் தாமே அவற்றிற்கு விளக்கமாக நின்ற வரதராசனாரை இன்று கண்டோம். எல்லாவற்றிற்கும் மேலாக அவரொடு கலந்து, அவரொடு பழகிய அவருடைய உணர்வுகளில் பங்கு கொண்டு அவர் வாழ்ந்த காலத்தில் நாமும் வாழ்ந்தோம் என்று பெருமை கொள்ளும் நிலையில் நாம் நிற்கிறோம். இவர் புகழ் என்றும் வாழ்க என்று வாழ்த்துகிறேன்.

இவர் கடைசியாக இருந்து தொண்டாற்றிய இப் பல்கலைக் கழகத்தின் சுவர்களும் கல்லும் மண்ணும் இரும்பும் வாய் இருந்து பேசத் தொடங்கின் இவர் ஒவ்வொன்றையும் எவ்வெவ்வாறு திறனாய்ந்தார் என்பதை பேசும். அவை பேசாவிடினும் அவர் விட்டுச் சென்ற அருமைக் கலைப்பெட்டகங்களும் அவரைப் போற்றி அவர் புகழ்பாடும் மாணவர், அறிஞர், அறவோர் குழாங்கள் இங்கே என்றும் அவர் புகழ் பாடிக் கொண்டிருக்கும் என்பது உறுதி.

இந்த மு.வ, நினைவுச் சொற்பொழிவுகளை முதன் முதலாக இந்த ஆண்டு நிகழ்த்த என்னை அழைத்த இப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் அவர்கட்கும், பதிவாளர் அவர்களுக்கும், சிறப்பாகத் தமிழ்த்துறைத் தலைவர் அவர்கட்கும், தமிழ்ப்பேரறிஞர் பிறருக்கும் என் வணக்கத்தையும் நன்றியையும் கூறி விடைபெற்றுக்கொள்ளுகின்றேன். இரண்டு நாட்களிலும் என் பேச்சினைக் கேட்டுச் சிறப்புச் செய்த உங்கள் அனைவருக்கும் என் நன்றி உரித்தாகுக! வணக்கம்.

## இணைப்பு 1

# டாக்டர் மு. வ. அவர்கள் எழுதிய நூல்கள்

(திரு. சு. திருநாவுக்கரசு, எம். ஏ. அவர்கள் தொகுத்த முறைப்படி)

1. நாவல்..... 13
   1. செந்தாமரை
   2. கள்ளோ? காவியமோ?
   3. பாவை
   4. அந்த நாவல்
   5. மலர்விழி
   6. பெற்ற மனம்
   7. அல்லி
   8. கரித்துண்டு
   9. கயமை
   10. நெஞ்சில் ஒரு முள்
   11. அகல் விளக்கு
   12. மண் குடிசை
   13. வாடா மலர்
2. சிறுகதை......2
   1. விடுதலையா?
   2. குறட்டை ஒலி
3. சிந்தனைக் கதை......2
   1. கி.பி. 2000
   2. பழியும் பாவமும்
4. நாடகம்......6
   1. பச்சையப்பர்
   2. மனச்சான்று
   3. இளங்கோ
   4. டாக்டர் அல்லி
   5. மூன்று நாடகங்கள்
   6. காதல் எங்கே?
5. கட்டுரை நூல்......11
   1. அறமும் அரசியலும்
   2. அரசியல் அலைகள்
   3. குருவிப் போர்
   4. பெண்மை வாழ்க
   5. குழந்தை
   6. கல்வி
   7. மொழிப் பற்று
   8. நாட்டுப் பற்று
   9. உலகப் பேரேடு
   10. மண்ணின் மதிப்பு
   11. நல்வாழ்வு
6. இலக்கியம் .... 24
   1. தமிழ் நெஞ்சம்
   2. மணல் வீடு
   3. திருக்குறள் அல்லது வாழ்க்கை விளக்கம்
   4. திருக்குறள் தெளிவுரை
   5. ஓவச்செய்தி
   6. கண்ணகி
   7. மாதவி
   8. முல்லைத்திணை
   9. நெடுந்தொகை விருந்து
   10. குறுந்தொகை விருந்து
   11. நற்றிணை விருந்து
   12. இலக்கிய ஆராய்ச்சி
   13. நற்றிணைச் செல்வம்
   14. குறுந்தொகை செல்வம்
   15. நெடுந்தொகைச் செல்வம்
   16. நடைவண்டி
   17. கொங்குதேர் வாழ்க்கை
   18. புலவர் கண்ணீர்
   19. இலக்கியத் திறன்
   20. இலக்கிய மரபு
   21. இளங்கோ அடிகள்
   22. இலக்கியக் காட்சிகள்
   23. குறள் காட்டும் காதலர்
   24. சங்க இலக்கியத்தில் இயற்கை
7. சிறுவர் இலக்கியம்......4
   1. குழந்தைப் பாட்டுகள்
   2. இளைஞர்க்கேற்ற இனிய கதைகள்

3. படியாதவர் படும் பாடு
4. கண்ணுடைய வாழ்வு

8. கதை இலக்கியம்...4
1. அன்னைக்கு
2. தம்பிக்கு
3. தங்கைக்கு
4. நண்பர்க்கு

9. பயண இலக்கியம்......1
1. யான் கண்ட இலங்கை

10. இலக்கிய வரலாறு......1
1. தமிழ் இலக்கிய வரலாறு

11. மொழியியல்......6
1. மொழி நூல்
2. மொழியின் கதை
3. எழுத்தின் கதை
4. சொல்லின் கதை
5. மொழி வரலாறு
6. மொழியியற் கட்டுரைகள்

12 வாழ்க்கை வரலாறு .....4
1. அறிஞர் பெர்னாட்ஷா
2. காந்தியண்ணல்
3. கவிஞர் தாகூர்
4. திரு.வி.க.

13. ஆங்கில நூல்......2
1. The Treatment of Nature in Sangam Literature
2. Ilango Adigal

14. சிறுவர் இலக்கணம்

15. மொழிபெயர்ப்பு நூல்...2

இணைப்பு 2

# மு.வ. வின் வாழ்க்கைக் குறிப்பு

பிறப்பு: 25—4—1912

தாய்: அம்மாகண்ணு அம்மாள்
தந்தை: முனிசாமி முதலியார்
போற்றி வளர்த்தவர்: தாய்வழிப் பாட்டி நரசம்மா
இயற்பெயர்: திருவேங்கடம்
தாத்தாவின் பெயர் இடும் மரபின் வழி: வரதராசன்
சொந்த ஊர்: வேலம் (வ.ஆ.)

படிப்பு: வேலம், வாலாஜா, திருப்பத்தூர்
பள்ளி இறுதித் தேர்வு, 1928

எழுத்தர் பணி: திருப்பத்தூர் தாலுக்கா அலுவலகம்–1928

திருமணம்; துணைவியார் திருமதி இராதா அம்மையார்–1935

வித்துவான் முதல் வகுப்பில் தேர்வு: 1935, 1000 ரூபாய் முதற் பரிசு

திருப்பத்தூர் நகராட்சி உயர்பள்ளித் தமிழாசிரியர்: 1935
பீ.ஓ.எல். தேர்வு: 1939
பச்சையப்பர் பணி: தமிழ் விரிவுரையாளர்: 1939
,, கல்லூரியில் பீ,ஓ.எல். வகுப்புத் தொடக்கம்: 1940

எம்.ஓ.எல். பட்டம்: 1944
தமிழ்த் துறைத் தலைவர்: 1945
முதல் நாவல் (செந்தாமரை) எழுதியது: 1945
வெளியீடு: 1948
சென்னைப் பல்கலைக் கழக ஆனரரி ரீடர்: 1945
டாக்டர் பட்டம்: 1948
பல்கலைக் கழகத் துணைப் பேராசிரியர் (ஓராண்டு): 1948
இலங்கைப் பயணம் (முதல் முறை–யான் கண்ட இலங்கை): 1949
காஷ்மீர் பயணம் (மண்குடிசை): 1957
தமிழக அரசின் பாராட்டும் பரிசும்: 1957
சென்னைப் பல்கலைக் கழகப் பேராசிரியர்: 1961
மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்: 1971
அமெரிக்க நாட்டுப் பயணம் (ஊஸ்டர் கல்லூரி டி.லிட். பட்டம்): 1972
மறைவு: 10—10—1974

இணைப்பு 3

# மு. வ. வின் வழிகாட்டிகள்

இரண்டு நாட்களிலும் மு.வ. அவர்கள் பலருடைய நூல்களைப் பயின்றும் சிலருடன் நெருங்கிப் பழகியும் அவற்றையும் அவர்களையும் வழிகாட்டிகளெனக் கொண்டு தம் நூல்களை எழுதினர் எனக் குறித்துள்ளேன். எனவே அவர் பச்சையப்பர் கல்லூரியில் பணியாற்றிய போது நூல் நிலையத்திலிருந்து எத்தகைய நூல்களை எடுத்துப் பயின்றார் என்பதை ஓரளவு சுட்டிக் காட்டவே கீழே உள்ள நூற் பட்டியலைத் தந்துளனேன். (இவைகளையன்றி வேறு இலக்கண இலக்கிய நூல்கள் பலவும் பாடம் நடத்துவதற் கெனவும் ஆய்வுக் கெனவும் எடுத்துப் பயன்படுத்தி யுள்ளார்.) இந்த நூல்களைத் தவிர்த்து காண்டேகர் நாவல்கள், எச்.ஜி. வெல்ஸ், பெர்னட்ஷா போன்றார் தம் நூல்கள், இலக்கியத் திறனய்வு, மொழி வரலாறு பற்றி எழுதிய ஹட்சன், புரும்பீல்டு, யெஸ்பர்சன் போன்றோர் நூல்கள் ஆகியவற்றைத் தமக்கெனவே சொந்தமாக வாங்கி வைத்துக் கொண்டிருந்தார்.

இவர் அதிகமாக நூல்கள் எழுதத் தொடங்கிய 1945, 1946 ஆகிய ஆண்டுகளிலும் அக்கால எல்லைக்குப் பத்தாண்டுகள் கழித்து, 1957, 1958 ஆகிய ஆண்டுகளிலும் இவர் நூலகத்திலிருந்து எடுத்துப் பயன்படுத்திய நூல்களுள் சிலவற்றை மட்டுமே இங்கே இணைத்துள்ளேன். (பிற வேண்டுமாயின் பச்சையப்பர் கல்லூரியின் நூல் நிலையத்தில் காணலாம்.)

## 1945

1. Critical Studies in Kural—M. S. P. Pillai
2. The Maxims of Tiruvalluvar—V. V. Iyer
3. The Romantic Agony—Praz
4. Adventures in criticism—Quiller Couch
5. Aspects of Poetry—J. C. Shairp
6. Pathupattu—V. V. S. Iyer
7. Literary Criticism—Coleridge
8. Modern Review—R. Chatterjee
9. Purananuru—Dr. Iyer
10. Plays, pleasant and unpleasant—Shaw
11. Contemporary Indian Philosophy—Sir Radha-krishnan
12. The Rhetoric of Aristotle—Welldon
13. The Realm of Poetry—Brown
14. The Social Criticism of Literature—Buch
15. The Art of Literary Study—Charlton
16. Principles of Literary Criticism—Richards
17. The Judgement of Literature—Tucker
18. Convention and Revolt in Poetry—Louis
19. Meendum Valundal—V. S. Sastriar
20. Agananooru—R. Iyengar
21. Ruskin—Hobson
22. Pathupattu—Dr. S. Iyer
23. Guide to Modern Thought—C. E. M. Joad

## 1946

1. Tamil Matham—Maraimalai Adigal
2. Pathinoram Thirumarai—Arumuga Navalar
3. Everybody's Political What is What-Shaw
4. Ninaivu Manjari—Dr. S. Iyer
5. Androcles and the Lion—Shaw
6. Avvaiyar—Anavaratha Vinayagam Pillai
7. Ekanathar— -do-

8. Histhry of Tamil Language—V. G. Subramania Sastry
9. Semantics—Breal
10. Pathu pattu—Dr. S. Iyer
11. Kurunthogai— -do-
12. Silapadikaram—Dr. S. Iyer
13. Dravidic Pronouns—V. V. Reddiyar
14. Grammatical Essays— -do-
15. Tamil Grammar--Lazarus
16. Pandai Tamil Eluthugal--T. N. Subramaniyam
17. Tamil Poets of the XVII Century—S. S. Desikar
18. Sanskrit Element—Dr. S. Anavaratha Vinayagam Pillai
19. Parallel Proverbs—T. Chelvakesavarayan
20. Dravidic Studies—Mark Collins
21. Defence of Poetry—Shelley
22. Aesthetics—Hegel
23. Milton's Theory of Poetry and Fine Art—Langdon
24. Philosophical and Literary Essays—Shelley
25. The Philosophy of Grammar—Jesperson
26. English Syntax—Kellner
27. English Language—Meikle John
28. Mrs. Warren's Profession—Shaw
29. Kurunthogai—Dr. S. Iyer
30. The Discovery of Poetry—Lyon
31. History of Tamil Language—V. G. S. Sastri
32. Pastoral Poetry and Pastoral Drama—Greg
33. Nature in English Poetry—Reynolds
34. Sakunthala Natagam—Swami Vedachalam
35. Naladiyar—G. U. Pope
36. Economic History of England—Briggs
37. Ruskin—A. H. R. Ball
38. Ruskin—David Lang
39. Ruskin—Harrison

40. The Two Paths—Ruskin
41. Modern Painters—Ruskin
42. Prefaces and Essays—Wordsworth
43. Literary History of India—Frazer
44. Ten Tamil Ethics—T. B. Krishnasami
45. An Introduction to Poetry—Alden
46. Mathew Arnold—Paul
47. Essays in Criticism—Mathew Arnold
48. Main Currents in 19th Century Lit.—Brander
49. History of English Poetry Vols II & VI
50. Grammatical Essays—V. V. Reddiar
51. Ilamaiparuvam—Senapathi
52. Eri Natchathiram—Kandekar
53. Kanchanai—Pudumaipithan
54. Sekkilar—K. Subramania Pillai
55. Tamil valaru Parts I & II—K. Srinivasa Pillai
56. Backgrounds of Literature—H. W. Mabie
57. History of English Literature—H. A. Taine
58. Tennyson—Lockyes
59. S. I. Inscriptions Vol. II Part II—Hultzsch
60. About Education—C. E. M. Joad
61. A New Study of English Poetry—Newbolt
62. Tennyson—S. Brooke
63. Tennyson—Lockyes
64. Tennyson's In Memoriam—Genung
65. Adonais—Rosetti
66. Progress in Language—Jesperson
67. The Philosophy of Grammar—Jesperson
68. Kathaigal—C. Rajagopalachariar

1957

1. Comparative Grammar of Dravidian Languages —Caldwell
2. The Romantic Imagination—C. M. Boura
3. The Structure of Complex Words—William Empson

4. Seven types of Ambiguity—William Empson
5. Short History of English Literature—Legouis
6. Anatomy of Criticism—N. Frye
7. Glimpse of Ancient Dravidians—Senathiraja
8. The Age of Gnanasambandar—P. Sundaram Pillai
9. A Handbook of Indian Art—Harvell

1958

1. The Making of the State—M. Ruthnasami
2. The Meaning of Meaning—I. A. Richards
3. The Craft of Fiction—Percy Lubbock
4. Archetypal Patterns in Poetry—Bodkin
5. On Modern Literature—W. P. Ker
6. The Appreciation of Poetry—P. Gurray
7. Literary Appreciation—Peter Westland
8. Criticism and Creation—H. I. C. Grierson
9. About English Poetry—G. F. Bradley
10. Practical Criticism—I. A. Richards
11. Principles of Literary Criticism—I. A. Richards
12. The Vagrant Mood—W. Somerset Maugham